# அருளோசை

திருவள்ளுவர்
ஆண்டு 2004
சித்திரை
1973 ஏப்ரல்



திருநாவுக்கரசு சுவாமிகள்

தமிழ் நாடு தெய்விகப் பேரவை

சென்னை-18




சிறைவாசி

என்னைப்போல உள்ள ஆயிரக்கணக்கான சிறைவாசிகளுக்கு அருளோசை ஊக்கமும் உற்சாகமும் அளிக்கவேண்டும்.

—மு. விஜயன், கைதி எண் 42212, மத்திய சிறை, வேலூர்.

[அருளோசை இதழ் எல்லா மத்திய சிறைச்சாலைகளுக்கும் இலவசமாக அனுப்பப்பெற்று வருகிறது —ஆசிரியர்]

முன்னதாகவே

திருவிழாக்கள், விரதங்கள் போன்ற கட்டுரைகளை முன்னதாகவே வெளியிடுங்கள்.

—டாக்டர் ஆர். வத்சன், மேட்டுப்பாளையம்.

நற்பணி

தங்களது நற்பணி சிறக்க !

—க. வேலாயுதம், தூத்துக்குடி.

திரட்டித் தருகின்ற "தேன்"

மருள் நீங்கக் கோயில் மணியோசை கேட்கையிலே, அருளோசை வந்து ஆன்மாவின்—இருள் தனையே விரட்டியது கண்டேன் விளக்கங்கள் யாவும், திரட்டித் தருகின்ற தேன்.

—அரங்க-முத்துமணி, கீழப்பழுவூர்.

பின்பற்ற

சிவராத்திரி விரதம் பற்றிய விளக்கம், ஒவ்வொருவரது வாழ்க்கையிலும் பின்பற்ற வேண்டியதாகும்.

—ஜே. ஞானமூர்த்தி. ஆசிரியர், வேதாரண்யம்.

வள்ளி கணவன்

தங்கள் தொண்டு வளரப் பொங்கும் மகிழ்ச்சியுடன் வள்ளிகணவனை வேண்டுகின்றேன்.

—வெ. இராஜாமணி, என். பரூர், கேரளா

இளைஞர்களுக்கு

தவத்திரு அடிகளார் அவர்களின் கட்டுரைகளும்—விளக்கங்களும், என்போன்ற இளைஞர்களுக்கு மிகவும் பயனுடையவைகளாக இருக்கின்றன.

—சு. ப. இராமமூர்த்தி, சென்னை-24.

ஏற்றுக்கொள்வீர்களா.......?

அருளோசைக்குக் கவிதைகள் எழுதியனுப்பலாமா ? ஏற்றுக்கொள்வீர்களா ?

—மு. ச. இராஜரத்தினம், தேனி.

[அருளோசை சமய பாடபோதனைக்காகவே வெளியிடப்படுகிறது கவிதைகளை வெளியிட்டால் அவற்றில் வினாக்கள் கேட்க இயலாது. எனவே வெளியிடுவதற்கில்லை—ஆசிரியர்].

நல்ல பல

அருளோசையில் நல்ல பல கருத்துக்கள் வெளிவருகின்றன.

—எம். சிவராமன், சிவகெங்கை.






திங்களிதழ்

ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.

| மணி 1 | பிரமாதீச சித்திரை<br>1973 ஏப்ரல் | ஓசை 10 |
|---|---|---|

அருளோசை அன்பர்களுக்கு வணக்கம்!

அனைவருக்கும் பிரமாதீச புத்தாண்டு நல்வாழ்த்துக்கள். "அருளோசை"க்கு இந்த இதழோடு பத்துத் திங்கள் நிறைவு பெறுகிறது. அடுத்த ஆண்டிலிருந்து, பல புதிய மாற்றங்களைச் செய்ய எண்ணியுள்ளோம். இந்த இதழில் 'உரைகல்' பகுதியில் சில அன்பர்கள் தெரிவித்துள்ள கருத்துக்களை வெளியிட்டுள்ளோம். அவற்றைப் பற்றி நீங்களும் சிந்தித்து, உங்களது கருத்தினைத் தெரிவித்தால், அத்தகைய ஏற்பாடுகளைச் செய்வது பற்றி நாங்கள் ஒரு முடிவுக்கு வரத் துணையாக இருக்கும்.

அன்பர்கள் முகவரி மாற்றத்தை உடனே எங்களுக்குத் தெரிவிக்க வேண்டும், 10-ஆம் தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்கும் முகவரி மாற்றங்களைத்தான் செய்ய முடியும். அதற்குப் பிறகு வரும் மாற்றங்கள் அடுத்த இதழிலிருந்து செய்யப் பெறும். வினாவிடைப் பகுதியில் கலந்து கொள்ளும் அன்பர்கள் தங்களது சந்தா எண்ணைத் தவறாது குறிப்பிட வேண்டும்.

சொந்தக் கையெழுத்தில் இருக்கவேண்டும். விடைத்தாளின் இறுதியில் தவறாது கையொப்பம் இடவேண்டும், முழுமுகவரியும் எழுத வேண்டும். முடிவு தேதிக்குப்பின் வரும் விடைத்தாள்கள் ஏற்றுக் கொள்ள பெறமாட்டா. பல விடைத்தாள்களில் ஒருவர் விடையெழுத வேறு ஒருவர் கையொப்பமிட்டு வந்துள்ளன. இது தவிர்க்கப் பெற வேண்டியதாகும்.

உரைகல் பகுதிக்கு எழுதுகிறவர்கள், 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்கும்படி எழுத வேண்டும். அப்போது தான் அவற்றைப் பரிசீலித்து வெளியிட உதவியாக இருக்கும். வினாவிடைப் பகுதியில் கட்டுரை பற்றிய கேள்விகளுடன் பொது சமய அறிவுத் தொடர்பான வினாக்களும் இந்த இதழ் முதல் தொடங்கியிருக்கிறோம். பொது அறிவு வினாக்களுக்குச் சரியான விடைகள் அடுத்த இதழில் வெளிவரும்.

அ. நாராயணசுவாமி, பி.ஏ.,
பதிப்பாசிரியர்.

## இந்த இதழில்



# "அருளோசை"

## வினு விடைப் பகுதி—மார்ச்சு-73
## பரிசு பெற்றவர்கள்

முதல் பரிசு: திரு. சிவ. மூர்த்தி, வேலூர், வட ஆர்க்காடு மாவட்டம், சந்தா எண் 571.

இரண்டாம் பரிசு: திரு. ஆ. இளையபெருமாள், திருச்செங்காட்டங்குடி, தஞ்சாவூர் மாவட்டம். சந்தா எண் 1730.

மூன்றும் பரிசு: திரு. சி. அ. அனந்தராமன், குள்ளமுடையானூர், சேலம் மாவட்டம், சந்தா எண் 79.

நான்காம் பரிசு: செல்வி. சொ. காந்தியம்மாள், பாளையங்கோட்டை, நெல்லை மாவட்டம், சந்தா எண் 791.

அருளோசை சந்தா விகிதம்

| | | |
|---|---|---|
| | ரூ. | |
| சந்தா (ஓராண்டு) ... ... ... ... | 3 | 00 (மூன்று) |

விளம்பர விகிதம்.

| | | |
|---|---|---|
| பின் அட்டை வெளிப்புறம் ... ... ... | 100 | 00 |
| பின் அட்டை உட்புறம் ... ... ... | 50 | 00 |
| முன் அட்டை உட்புறம் ... ... ... | 75 | 00 |
| உள்ளே முழுப்பக்கம் ... ... ... | 25 | 00 |

மேற்கண்ட விகிதத்தில் அரை, கால் பக்க விளம்பரங்களும் ஏற்றுக் கொள்ளப்பெறும்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:
ஆசிரியர், "அருளோசை"
நெ. 9, மகாராஜா சூரியராவ் சாலை,
ஆழ்வார்பேட்டை, சென்னை-600018

# பொருளைப் போற்று

தவத்திரு. குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவர் நடைமுறை வாழ்க்கைக்கு அப்பாற்பட்ட கற்பனை உடையவரல்லர். அவருடைய சிந்தனைப் போக்கு வாழ்வியலை ஒட்டியே அமைந்திருந்தது. நடைமுறை உண்மைகளுக்கு அவர் மாறுபட்டவரல்லர். ஆதலால், மனித வாழ்க்கைக்கு மிக மிக இன்றியமையாததாகிய பொருளைப் பற்றிய திருவள்ளுவரின் கருத்து இரண்டுபட்ட தன்று; குழப்பமானதுமன்று; மிகமிகத் தெளிவானது.

பொருளின் அடித்தளத்திலேயே தனிமனிதனின் வாழ்க்கையையும் சமுதாயத்தின் வாழ்க்கையையும் காட்டுகின்றார். ஏன்? பழந்தமிழ் மரபும் அதுதானே! மனிதன் அடையக் கூடிய பேறுகள் நான்கு என்பது தமிழ்மறை. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பனவாகும். அவற்றுள் நடுவன வாகிய பொருள் எய்த இருதலையும் எய்தும் என்பது தமிழ் நூல் முடிபு. அதனாலன்றோ திருவள்ளுவர் அறம், பொருள், இன்பம் என்று முப்பால் நூல் செய்தார். வீடு பற்றி அவர் தனி இயல் அமைக்கவில்லை, காரணம், அறம், பொருள். இன்பம் ஆகியவை மனிதன் முயன்று செய்யக் கூடியவை— பெறக் கூடியவை. ஆனால் வீடு, அறம் பொருள் இன்பத்தை முறையாகச் செய்து அனுபவித்து வெற்றி பெற்றவர்களுக்கு இறைவனால் வழங்கப் பெறுவது. வாழும் மனிதர்க்கே திருவள்ளுவர் நூல் செய்தமையின் காரணமாக, வீடு பற்றிய தனியியல் அமைக்கவில்லை. எனினும் ஒரோவழி குறிப்பிட்டுள்ளார்.

திருவள்ளுவர் ஒரு பொருளியல்துறை அறிஞர். பொருளின் தோற்றத்திற்குரிய நிலைக்களனை பாதுகாத்தல், பங்கீடு ஆகியவைபற்றித் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றார். பொருளில்லையானால், உலகியல் இல்லை என்று கூறுகிறார். வறட்சித்

தன்மையுடைய மாயா வாதம், பௌத்தம், சமணம் ஆகிய சமயக் கருத்துக்கள் தமிழகத்தில் ஊடுருவத் தொடங்கிய பிறகுதான், தமிழர் வாழ்வியல் கெட்டது; வாணிகம் வீழ்ந்தது. ஆட்சி அந்நியர் கைக்கு மாறியது. இந்த நிலையினை உணர்ந்த தமிழகச் சிவநெறிச் சான்றோர்களாகிய மாணிக்க வாசகர், அப்பரடிகள், சுந்தரர் போன்றோர் பொருளின் மேம்பாட்டினை வலியுறுத்தினர். ''முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்'' என்பது மாணிக்க வாசகரின் வாக்கு. ''ஏரி நிறைந்தனைய செல்வம் கண்டாய்'' என்றும், ''பொன்னானாய், மணியானாய்'' என்றும் அப்பரடிகள் பாடுகின்றார். சுந்தரர் வாழ்க்கைக்கு இறைவன் பொற்காசு வழங்கியதைச் சேக்கிழார் சிந்தை இனிக்கப் பாடுகின்றார்.

பொருள் உலகியல் அச்சு; அதை வைத்தே உலகியல் நடைபெறுகிறது. திருவள்ளுவர் பொருளைப் போற்ற வேண்டும் என்று கூறுகின்றார். பொருளைப் போற்றுதல் என்றால் பொருளைப் பூசித்தல் என்பது பொருளன்று. பொருளைப் பாதுகாத்தல் என்பதுதான் பொருள். பாதுகாத்தல் என்றால் செல்வத்தின் பயனாகிய இன்பம் நுகர்தல், ஈத்துவந்து மகிழ்தல் ஆகியன செய்யாமல் பூட்டிவைத்துப் பாதுகாப்பது என்பதும் பொருளன்று. பொதுவாகவே, போற்றுதல் என்ற சொல்லிலேயே வளர்த்தல், பாதுகாத்தல் என்ற இரு கருத்துக்களும் அடங்கும்.

''பொருட் செல்வம் போற்றுவார் கண்ணே உள'' என்கிறார் திருவள்ளுவர். பொருட் செல்வம் போற்றுதற்கு வேண்டிய முதற்குணம், பொருளின் மதிப்பினை—சிறப்பினை உள்ளவாறு உணர்தல். பொருள் என்றால், அது வளரும் இயல்புடையதேயன்றிக் குறையும் இயல்புடையதன்று. பொருட் செல்வத்தை வாழ்க்கை என்ற களத்தில், உழைப்பு என்ற நீரூற்றிச், சிக்கனம் என்ற வேலி கட்டிப் பாதுகாத்தல் வேண்டும். பொருளின் தாய் உழைப்பேயாகும். உழைப்பின்றேல் பொருள் இல்லை. வந்த பொருளைச் சிக்கன முறையில் பாதுகாக்க வேண்டும். அதனாலன்றோ, அப்பரடிகள், ''ஏரி நிறைந்தனைய செல்வம் கண்டாய்" என்றார். ஏரிக்குக் கரைக்கட்டித் தண்ணீரைக் காப்பது போல், பொருளுக்குச் சிக்கனம் என்ற கரை தேவை. சிக்கனம் என்றால் கஞ்சத்தனம் என்று பொருளல்ல—அப்படிப் பொருள் கொள்ளக் கூடாது. ஒரு ரூபாய் செலவில் முடிக்கக்கூடிய காரியத்திற்கு இரண்டுரூபாய் செலவு செய்வது பொருள் இழப்பிற்குரிய வழியாகும். அத்தகையோரிடத்தில் செல்வம் தங்குவதில்லை. மேலும், பொருள் வருவதற்

குரியனவாகக் கிடைத்துள்ள வாய்ப்புக்களை இழக்காமல் முறையாகப் பயன்படுத்திப் பொருளீட்ட வேண்டும். வாய்ப்புக்களை இழப்பதும்கூடப் பொருள் இழப்பேயாகும். அதுபோலவே ஒரு களம்—அதற்குப் பயன்படுத்தக் கூடிய உழைப்பு ஆகியவை மூலம் எவ்வளவு பொருள் ஈட்டவேண்டுமோ, அவ்வளவையும் ஈட்டவேண்டும். அதற்குக் குறைவாக ஈட்டுதலும் பொருள் இழப்பிற்குரிய வழியேயாகும். பொருள் இழப்பு மட்டுமல்ல—அதைத் தொடர்ந்து வருகிற இழப்புக்கள் பல உண்டு. பொருள் இழப்பினைத் தொடர்ந்து சிறப்பிழத்தல், வறுமை, நோய், வாழ்க்கைச்சுமை ஆகியவையும் அவற்றினைத் தொடர்ந்து நரகமும் வரும்.

"பொருளாட்சி போற்றாதார்க்கில்லை" என்பதைத் திருவள்ளுவர் "புலால் மறுத்தல்" என்னும் அதிகாரத்தில் வைத்து விளக்கியுள்ளார். இது, பொருளாட்சியின் அவசியத்தை எளிதில் மனங்கொள்ள உணர்த்துதற்கேயாம்.




## திருக்கழுக்குன்றம் வேதகிரீசுவரர் கோயில்

திரு. கே. எஸ். நரசிம்மன், பி.ஏ., பி.எல்., ஐ.ஏ.எஸ்.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

"தோடுடையான் ஒருகாதில் தூயகுழை தாழ
ஏடுடையான் தலைகலனாக இரந்துண்ணும்
நாடுடையான் நள்ளிருள் ஏம நடம்ஆடும்
காடுடையான் காதல்செய் கோயில் கழுக்குன்றே."

"கண்ணுதலான் காதல்செய் கோயில் கழுக்குன்றை
நண்ணியசீர் ஞான சம்பந்தன் தமிழ்மாலை,
பண்ணியல்பாற் பாடிய பத்தும் இவைவல்லார்
புண்ணியராய் விண்ணவ ரோடும் புகுவாரே"

—சம்பந்தர்.

முன்னுரை :

தொண்டைநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவதலங்களுள், திருக்கழுக்குன்றமும் ஒன்று. இது சென்னையிலிருந்து 45 கல் தொலைவிலும், செங்கற்பட்டிலிருந்து 9 கல் தொலைவிலும் உள்ளது. பண்டைக் காலத்தில், திருக்கழுக்குன்றம் தொண்டை நாட்டுக்குரிய 24 கோட்டங்களுள், களத்தூர்க் கோட்டத்தில் களத்தூர் நாட்டைச் சேர்ந்திருந்தது. கல்வெட்டுக்கள் இதனை "உலகளந்த சோழபுரம்" என்று குறிப்பிடுகின்றன.

காதல்செய் கோயில்

சிவபெருமான் இத்தலத்தில மிகவும் விருப்பங் கொண்டு வீற்றிருக்கின்றார். அதுபற்றியே, "காதல்செய் கோயில் கழுக்குன்றே" எனத் திருஞானசம்பந்தர் தமது தேவாரத் திருப்பதிகத்தில், பதினொரு பாடல்களிலும் குறிப்பிட்டருளுகின்றார். இத்தலத்தின் சிறப்பை உணர்த்த இஃதொன்றே போதியதாகும். திருக்கழுக்குன்றத்திற்கு நாம், நம் வாழ்க்கையில் எத்தனைக் கெத்தனை முறை செல்ல முடியுமோ, அத்தனை முறையும் சென்று தொழுதல் வேண்டும். அத்தகைய சிறந்த புண்ணியப் புனிதப் பெருந்தலம், திருக்கழுக்குன்றம். அதனாலேயே சுந்தரமூர்த்தி சுவாமிகள்,

" சென்று சென்று தொழுமின்கள் தேவர் பிரான் இடம்
கன்றி ஞேடு பிடிசூழ் தண் கழுக் குன்றமே "

என்று பாடி அருளியிருக்கின்ருர். இதனுலும் திருக்கழுக்குன்றத்தின் இணையற்ற பெருஞ் சிறப்பு இனிது விளங்கும். அப்பர் சம்பந்தர் சுந்தரர் மாணிக்கவாசகர் பட்டினத்தார் அருணகிரிநாதர் முதலிய சான்ருேர்கள் பற்பலரும், இத்தலத்தைப் புகழ்ந்து பாடிப் போற்றி யுள்ளனர்.

### பட்சி தீர்த்தம்

இதற்குப் பட்சி தீர்த்தம் எனவும் பெயர் வழங்கும், வடநாட்டினின்று இப்புனிதப் பெருந்தலத்தைத் தரிசிக்க, ஏராளமானவர்கள் நாடோறும் வந்து செல்கின்றனர். பிணிவாய்ப்பட்டோர், பேய்கோட்பட்டோர், மனநோயுற்ருேர் முதலிய பலர் இத்தலத்திற்கு வந்து, பலநாள் தங்கி மலேவலம் வந்து, இறைவனே வழிபட்டுத் தத்தம் குறைநீங்கி நலமடைந்து இன்புற்றுச் செல்கின்றனர். இஃது ஒரு சிறந்த பிரார்த்தனேப் புண்ணியத் தலம்.

### வேதமலே

ஊரின் நடுவே சுமார் 600 அடி உயரம் உடையதாக மலே திகழ்கின்றது. இம்மலே நான்கு பகுதிகளாகக் காட்சியளிக்கின்றது. இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும், முறையே அம்மலே யின் அடியும் நடுவும் முடியும் சிகரமும் ஆக விளங்குகின்றன என்பது தலபுராணம். ஆதலின் இதற்கு வேதகிரி, வேதாசலம் எனப் பெயர்கள் வழங்கும்.

### கோயிலின் தொன்மை

இம்மலேயின் உச்சியில் சிவபெருமான், வாழைப்பூக் குருத்துப் போன்று சுயம்பு மூர்த்தியாகத் தோன்றியுள்ளார். அத்திருவுருவத் திற்குக் கவசம் சாத்திப் பூசித்து வருகின்றனர். வேதமாகிய மலே உச்சி யில் விளங்குதலின், இறைவனுக்கு மலேக்கொழுந்து என்றும் பெயர் வழங்குகின்றது. "கந்த சிஷ்யன் என்ற இரண்டாம் கந்தவர்மன் (கி.பி. 400-436), திருக்கழுக்குன்றத்துச் சிவன் கோயிலுக்கு நிபந்தம் விட்டிருந்தான்; அது மீட்டும் முதல் நரசிம்மவர்மன் (கி.பி. 630-668) காலத்தில் புதுப்பிக்கப் பெற்றது" என்று இராசராச சோழன் (கி.பி. 985-1014) கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது. ஆதலின் இக்கோயி லின் பழமை இனிது விளங்கும். மலேக்கோயில் கருவறையின் மூன்று பக்கத்துச் சுவர்களிலும், பிரமன் திருமால் நந்திதேவர் சண்டேசுவரர் சோமாஸ்கந்தர் தட்சிணுமூர்த்தி மார்க்கண்டேயர் போகசத்தி திருவுரு வங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அதன் உட்சுற்றில் சொக்கம்மை கோயில், வடக்கு நோக்கித் தனியே அமைக்கப்பெற்றுள்ளது.

குடைவரை மண்டபம் :

மலைக்கோயிலினின்று கீழே இறங்கி வரும் பாதையில் சுமார் 50 அடிக்குக் கீழ் ஒரு குடைவரை மண்டபம் உள்ளது. அஃது ஒரே பாறையில் இயன்றுள்ளது. அதன்கண் மண்டபமும் கருவறையும் அமைக்கப்பட்டுள்ளன. இக்குடைவரை மண்டபம் மகேந்திர வர்ம பல்லவன் (கி.பி. 600-630) காலத்ததாக, அறிஞர்கள் கருதுகின்றனர்.

தாழக்கோயில் :

ஊரின் நடுவில் மலையடிவாரத்தில் விசாலமான பெரிய சிறந்த கோயில் அமைந்து விளங்குகின்றது இது, தாழ்வரைக் கோயில் எனப்படும். பொதுமக்கள் இதனைத் தாழக்கோயில் என வழங்குவர். திருப்பெருந்துறையில் இறைவனால் ஆட்கொள்ளப்பெற்ற மாணிக்கவாசகர் மீண்டும் ஒரு முறை குருதரிசனம் பெற்று, "கணக்கிலாத் திருக்கோலம் நீ வந்து காட்டினாய் கழுக்குன்றிலே" எனப் பாடிய தலமாதலின், இங்கு மாணிக்கவாசகர் கோயிலும், அதற்கு நேர் எதிரில் இறைவன் திருவடி அமைக்கப்பெற்ற திருக்கோயிலும் அமைந்து விளங்குகின்றன. இங்குள்ள இறைவனின் பெயர் பக்தவத்சலர். அம்பிகை திரிபுர சுந்தரி. இக்கோயிலிலுள்ள சண்முகப்பெருமான் திருவுருவம், வீரபத்திரர் திருவுருவம் என்பவை, மிக்க அழகும் சிறப்பும் வாய்ந்தவை. இக்கோயிலில் பல்லவர் காலத்திற்கும், சோழர் காலத்திற்கும் உரிய, அழகிய சிற்பவேலைப்பாடுகள் செறிந்துள்ளன.

முடிவுரை :

சைவ சமய குரவர்கள் நால்வரும் வணங்கித் துதித்துப் போற்றியதும் சிறப்புமிக்க பிரார்த்தனைத் தலமாகத் திகழ்வதும் ஆகிய திருக்கழுக்குன்றத்து மலைக்கோயிலையும், தாழ்வரைக் கோயிலையும் அன்பர்கள் அனைவரும் சென்று கண்டு வணங்கி, இம்மை மறுமை நலங்கள் எல்லாம் எய்தி இன்புறுவார்களாக.

திருமடங்கள் மக்களிடையே சமய உணர்ச்சியைத் தூண்டி வளர்த்துத் தத்துவப் பயிற்சியைத் தந்து, சீலமும் நோன்பும் செறிவுமுடைய வாழ்க்கையை வழங்கித், திருவருளை நாடித் திருக்கோயில்களுக்குச் செல்ல ஆற்றுப் படுத்த வேண்டும். திருக்கோயில்கள், ஞானப்பசி யெடுத்துவரும் மக்களை அதனை அனுபவிக்கச் செய்து அந்த அனுபவத்தில் நிலைபெறுத்தல் வேண்டும்.

—தவத்திரு. குன்றக்குடி அடிகளார்.

உ

சிவமயம்

# இறையை வணங்கல்

காஞ்சி சிவம்

திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

அரியானை அந்தணர்தம் சிந்தை யானை,
அருமறையின் அகத்தானை, அணுவை, யார்க்குந்
தெரியாத தத்துவனைத், தேனைப், பாலைத்,
திகழ் ஒளியைத், தேவர்கள்தம் கோனை, மற்றைக்
கரியானை, நான்முகனைக், கனலைக், காற்றைக்,
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே.

திருச்சிற்றம்பலம்

இறைவன் என ஆண்பாற் படுத்து வழங்குகின்றோம். அவ்விறைமைப் பொருள் எத்திணையும் எப்பாலும் எவ்விடமும் கடந்தது. அக்கடந்த நிலையை உணர்த்தச் சொல்லுக்கு ஆற்றல் இல்லை. நாதாந்தமாகிய அப்பொருளை நாதகாரியமாகிய சொல் எவ்வாறு உணர்த்தும்? "சொல்லும் இடம் அன்று. சொல்லப்புகும் இடம் எல்லை சிவனுக்கு என்றால் நாம் என் சொல்கோம்" என்று திருவுந்தியாரிலே திருவிசலூர் உய்யவந்த தேவநாயனர், சொல்லுக்கும் நமக்கும் உள்ள மாட்டாமையைக் காட்டியருளினர். 'ஆணல்லன் பெண்ணல்லன் அலியுமல்லன், எனச்சொல் வேந்தரும் அப்பாற்பட்ட பொருளை ஆண் பாலில் வைத்தே உபதேசித்தருளினர். 'சொற்பதமுங் கடந்து நின்ற சொலற்கரிய சூழலாய்' 'சொற்பதங் கடந்த தொல்லோன்.' 'சொல்லிறந்து நின்ற தொன்மை' 'சொற்கழிவு பாதமலர்' என்றருளினர் மணிவாசகர்.. அமலம் உடைய பொருள் மாயாமல காரியமான சொல்லுக்கு அடங்குமோ? சொல்லுக்கு அடங்காச் சுகப்பொருளைச் சொல்லாற் சொல்லியுணர்வதே தொடக்கருத உயிர்க்கு வேண்டுவது. தொடக்கு அற்ற முத்தர் சொற்பொருள் இரண்டற்கும் அதீதநிலையில் இருந்து நேரே உணர்ந்தநுவிப்பர். அவ்வாறே உணர ஏனையோர்க்கு

இயலுமோ? அவ்விறைமைப் பொருளை உணர்ந்தோர், உணராதோர்க்கு உணர்த்துந் திறம் உண்மையை உள்ளவாறே உணர்த்தும் முறைமைய தாகும். அதுவருமாறு :—

அம்மெய்ப்பொருள், பெருமை, நுண்மை, அருமை, எளிமை என்னும் நாற்றிறத்திலும் ஒப்பில்லாதது, பெருமையிலும் நுண்மையிலும் ஒப்பில்லாதது, அருமையிலும் எளிமையிலும் ஒப்பில்லாதது என்று இருதிறத்திலும் அடக்கினர் பெரியோர். பெருமையால் நுண்மையும் அருமையால் எளிமையும் பெறலாம். ஆதலின் அருமை பெருமை இரண்டனுள் அடக்கிக் கூறுதலும் உண்டு. அவ்வாறே இத்திருத் தாண்டகத்தில் 'அரியான்' எனவும் 'பெரியான்' எனவும் முதலடியினும் முடிவடியினும் முறையே உணர்த்தியதறிக :—

ஒப்பில்லாப் பெருமை :—எல்லாவற்றையும் படைத்தும் காத்தும் அழித்தும், தான் படைக்கவும் காக்கவும் அழிக்கவும் படாமை. 'ஆக்கம் அளவு இறுதி இல்லாய்........ஆக்குவாய் காப்பாய், அழிப்பாய், அருள் தருவாய், போக்குவாய். எங்கும் நின்ற பரியன்.

ஒப்பில்லா நுண்மை :—அருவம், உருவம், அருவுருவம் என்னுந் தடத்த நிலையே அன்றி மெய்யுணர்வுருவாகிய சொருப நிலையும் உடைமை. உயிர்க்குயிர், உணர்வுக்குணர்வு ஆய நிலை, 'வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே.' உயிர்க்குயிராய் நேரியன். நோக்கரிய நோக்கு, நுணுக்கரிய நுண்ணுணர்வு.

ஒப்பில்லா அருமை :—ஆறு அறிவாய் அளவு இறந்த பல்லுயிர்க்குங் கோனாகி நிற்றல். அந்நிலைமையை முத்தர் உணர்வர், வானவர் காணார். வானோர்க்கு அரிய மருந்தே போற்றி. தேவாமிர்தம் தேவர்க்கு எளிதிற் கிடைக்கும். சிவாமிர்தம் அத்தேவர்க்கும் அரிதே. மருந்து-அமிர்தம். கனவிலும் தேவர்க்கு அரியாய் போற்றி, கனவேயும் தேவர்கள் காண்பரிய கனைகழலோன், காண்டற்கு அரிய கடவுள் கண்டாய், சொலற்கரிய சூழலாய். இது உன்தன்மை.

ஒப்பில்லா எளிமை :—பேரருள் என்பது அப்பெரும் பொருள் அகள மாய் அறிவரியதாயிருந்தும் தானே சகளமாய் எளியதாய்ப் போந்து உயிரைப் பக்குவப்படுத்தித் தானாகச் செய்யும் எளிமையை உணர்த்து வது. பேரருள் என்ற தொடரே அதன் உண்மையை உணர்த்தும், உயிர் உணரும் பான்மை உணர்த்த உணர்வதே. 'அறிவிக்க அன்றி அறியாவுளங்கள், அப்பொருளே தனக்குணர்த்தப் பிறர் ஒருவனையும் வேண்டாதது. முற்றுணர்வுடையது, பல்லாருயிருணரும் பான்மையென மேலொருவன் இல்லாதான் எங்கள் இறை. (வானோர் அல்லாத) ஏனோர்க்கு எளிய இறைவா போற்றி, (கனவிலுந்தேவர்க்கரி யாய் ஆகியும்) 'நனவிலும் நாயேற்கு அருளினை போற்றி,' கனவே யும் தேவர்கள் காண்பரிய கனைகழலோன் நனவே எனைப்பிடித்து

ஆட்கொண்டவா நயந்து நெஞ்சம், கண்ணீர் மல்கத் தெள்ளேணம் கொட்டாமோ, சிவபெருமான், தானே வந்து எனது உள்ளம் புகுந்து அடியேற்கு அருள் செய்தான்.

இந்நான்கும் வெவ்வேறு வகையாக ஆசிரியரால் உணர்த்தப்படும், திருக்களிற்றுப்படியார் முதற்கண், (1) அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் எனப் பெருமையையும், (2) அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர் என நுண்மையையும், (3) அம்மையப்பர் எல்லாவுலகுக்கும் அப்புறத்தார் என அருமையையும், (4) அவர் இப்புறத்தும் அல்லார் போல் நிற்பார் என எளிமையையும் உணர்த்தியதறிக. சிவஞான சித்தியாருள், உலகு அவனுருவில் தோன்றி யொடுங்கிடும் பெருமையும் உலகினுக்குயிராம் நுண்மையும், உலகினை இறந்து நின்றது அரனுரு எனப்படும் அருமையும், உலகுமாய் நின்ற எளிமையும் (68) இனிது விளக்கியவாறறிக. ஆரியத்தில், விசுவகாரணம் (பெருமை), விசுவாந்தரியாமித்துவம், (நுண்மை), விசுவாதிகம் (அருமை) விசுவரூபம் (எளிமை) எனப்படும்.

சிவஞானமுனிவர் (68. உரையில்) "சிந்திதன் ஆயினும் அசிந்திதனே" என்பதற்கு வேதத்துள் உருத்திரன் (1) விச்சுவாதிகன் (2) விச்சுவ காரணன் (3) விச்சுவத்திற்கு அந்தரியாமி (4) விச்சுவரூபி என்று கூறுஞ் சுருதிகளே சான்று," என்று எழுதினர். "உலகமே உருவமாக, யோனிகள் உறுப்பதாக, இலகுபேரிச்சா ஞானக்கிரியை உட்கரணம் ஆக, அலகிலா உயிர்ப்புலன்கட்கு அறிவினை ஆக்கி, ஐந்து நலமிகு தொழில்களோடும் நாடகம் நடிப்பன் நாதன்" என விசுவரூபி என்றதன் விளக்கம் அருணந்தி சிவத்தின் திருவாக்கில் வந்தது. இங்குக் கூறிய ஐந்தொழில் அறிவித்தற்கண் படும் மிக நுண்ணியன. பட்டினத்து அடிகள் அருளிய ஒருபா வொருபஃது முதலகவல் விசுவரூபியை விரித்துணர்த்துகின்றது. நாள்தொறும் அவ்வாறிருந்துவரின் பிறப்பில்லாப் பெருவாழ்வு எய்தும். திருவருட்பயன் தலைச் செய்யுளில் நிகரிலிறை என உத்தேசமாகக் குறித்து, இந்நான்கும் தனித் தனியா நில்லா.

பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்பின்மை யான்' என்று அந்நிகரிலிறைமையை வகுத்தும் அடுத்த நான்கு திருக்குறளால் விரித்தும் அருளினர் நம் ஆசிரியர் உமாபதி தேவாதிநாயனர். பருமையும் பெருமையும் ஒன்ருகக் கருதிய இடம் இது. பருமைக்கு நுண்மை மறுதலை. அப்பர் நாயனர், அரியான், பெரியான், சிந்தையான், கரியான், நான்முகன், கனல், காற்று கடல், வரை கலந்து நின்ற(வன்) என அந்நான்கு திறத்தையும் கூறியருளினர். அப்பெருமானைப் பேசாத நாள் எல்லாம் பிறந்து இருந்து வாழும் நாள் அல்ல. செத்திட்டிருக்கும் நாளேயாம். 'நாளும் அயர்ந்து மறந்து அரன் திருவடிகள் நினையமாட்டா மதியிலியேன் வாழ்வெல்லாம் வாளா மண்மேற் பிறந்த நாள் நாளல்ல. வாளா (நாவறளாமல்) ஈசன் பேர்பிதற்றிச் சீரடிமைத் திறத்துள் அன்பு செறிந்து எறும்பியூர் மலைமேல் சென்று மாணிக்கத்தை அடையப்பெற்றேன். விரிவச்சம்.

# அறிவிப்பு



புதிதாகச் சந்தா சேர்ந்த அன்பர்கள் உடனே இதழ் வரவில்லை என்று எழுதுகின்றனர். ஒவ்வோர் ஆங்கில மாதமும் 15-ஆம் தேதிக்குப்பின் சந்தாதாரர்களாகச் சேரும் அன்பர்களுக்கு அடுத்த ஆங்கில மாதம் 15-ஆம் தேதியன்று தான் இதழ் அனுப்ப இயலும், ஒரிதழுக்கு ஒரு வினத்தாள் தான் அனுப்பப் பெறும். பொது மன்றங் களுக்கு அனுப்பப்பெறும் வினத்தாளுக்கு மன்றத் தலைவர் அல்லது செயலாளர் விடை எழுதி அனுப்பலாம். நூல் நிலையங்களுக்கு அனுப்பப் பெறும் வினத்தாளுக்கு, நூலகர் விடையெழுதலாம். மற்ற வர்கள் வினவிடைப் போட்டியில் கலந்து கொள்ள விரும்பினல் அவர்கள் சந்தாதாரராகப் பதிவு செய்து கொள்ளுதல் நலம்.

—ஆசிரியர்



# மெய்ப்பொருள் காண்பது அறிவு

## சாதாரண அறிவும் விஞ்ஞான அறிவும்

[வித்துவான் திரு. வை. இரத்தினசபாபதி, எம்.ஏ., பி.ஓ.எல்.,]

முன்னுரை :

மனோதத்துவ இயல் (Psychology) மனத்தை மூன்றாகப் பிரித்துத் தன்னுடைய ஆய்வை நடத்துகிறது என்பதைச் சென்ற இதழ்க் கட்டுரையிற் கண்டோம். அறிவு (Cognition), இச்சை (Affection) செயல் (Conation) என்ற மூன்றனுள் Cognition என்ற அறிவுப் பகுதியை மட்டுமே அறிவாராய்ச்சியியல் ஆராய்கிறது. இதனால் மனோதத்துவ இயலுக்குரிய ஆய்வுக்களன் விரிவுடையதாக இருக்கிறது என்பதையும், அறிவாராய்ச்சி இயலுக்குரிய ஆய்வுக்களன் மிகச் சுருங்கியதாக இருக்கிறது என்பதையும் அறியலாம். ஆய்வுக்குரிய களம் விரிவுடையதாக இருக்கலாம் அல்லது சுருங்கியதாக இருக்கலாம், எனினும் மனோதத்துவ இயலும் அறிவாராய்ச்சி இயலும் விஞ்ஞானங்கள் என்பதை நாம் ஒப்புதல் வேண்டும். மனோதத்துவ இயல் ஒரு விஞ்ஞானத்துறை என்பதை ஒத்துக் கொள்வதில் கருத்து வேறுபாடு நிலவுகிறது. அத்துறையில் பட்டம் பெறுபவர்களுக்குத் தற்போது B.A., M.A., எனக் கொடுக்கப் பெறுகின்றன. அவைகளை B.Sc., M.Sc., எனக் கொடுக்க வேண்டும் என்ற போராட்டமும் இருக்கிறது. இந்நிலையில் விஞ்ஞான அறிவு எது? என்பதை நாம் வரையறுத்துத் தெரிந்து கொள்ள வேண்டும். இவ்வடிப்படையில் சாதாரண அறிவுக்கும் விஞ்ஞான அறிவுக்கும் உரிய வேறுபாடுகளை இக்கட்டுரையின் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

மாணிக்கவாசகரும் விஞ்ஞானமும்.

இக்காலத்தில் எந்த ஒரு செய்தியைப் பற்றிக் குறிப்பிட்டாலும் விஞ்ஞானயுகம், விஞ்ஞான நூற்றாண்டு எனப் பொதுவாகக் கூறக் காண்கிறோம். ஒருவர் விளையாட்டாக என்னைக் கேட்ட கேள்வி ஒன்று உண்டு.

" பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே "

என்று கூறிய மாணிக்கவாசகர் விஞ்ஞானம் என்ற சொல்லை எடுத்தாளவேயில்லையே! அவர் காலத்தில் விஞ்ஞானம் என்ற ஒன்றே இல்லை போலும்! என்றார். மாணிக்கவாசகர் பாடும் திருவண்டப்பகுதி முழுவதும் விஞ்ஞானந் தானே? என்றேன். உடனே அவர், "அது சாதாரண அறிவு, அதை வைத்துக் கொண்டு விஞ்ஞான அறிவு என்று நாம் கூறமுடியாது" என்றார். மேலும் நான் அவரிடம் மாணிக்கவாசகரைப் பற்றி விவாதிக்க விரும்பவில்லை. ஆனால் சாதாரண அறிவுக்கும் விஞ்ஞான அறிவுக்கும் என்ன வேறுபாடு என்பதை அறியவே என் மனம் விரும்பியது.

'விஞ்ஞானம்' என்பதற்கு விளக்கம்.

விஞ்ஞானம்' என்பது பற்றி அறிஞர்கள் பலர் விளக்கங் கூறுவதைக் கேட்டிருக்கிறேன். 'வி+ஞானம்' எனப்பிரிப்பர். 'வி' என்பது விரிவான், பரந்துபட்ட என்ற பொருள்களைத் தரும். எனவே விஞ்ஞானம் என்பது விரிந்து பரந்துபட்ட அறிவைத் தரும் என்பது ஒரு விளக்கம். 'வி' என்பதற்கு மேன்மை, நீக்கம் முதலிய பொருள் உள. 'விநாயகர்' என்பதற்கு தனக்குமேல் ஒரு நாயகன் இல்லாதவர் என்பதே தக்கபொருள். இப்பொருளில் விஞ்ஞானம் என்பதற்கும் தக்கபடி அமைத்துக் கொள்ளலாம். விஞ்ஞானிகள் என்பவர்கள் உலகில் உள்ள பல்வேறு பொருள் களையும் ஆராய்கிறவர்கள் என்றும் உலகில் உள்ள பொருள்களைப் பற்றி அறிவதே-அறிவிப்பதே விஞ்ஞானம் என்றும் விளக்கம் கூறுவர். இவ்விளக்கங்களெல்லாம் கேட்பதற்குச் சுவையாக இருக்கலாம், ஆயினும் விஞ்ஞானம் என்பதற்குரிய உண்மை விளக்கமாக அமையுமா? எனில் ஐயப்பாட்டுக்குரியதே.

சாதாரண அறிவு வேறு—விஞ்ஞான அறிவு வேறு.

விஞ்ஞான அறிவு என்றவுடன் அது உலகப் பொருள்களை-இயற்கைப் பொருள்களைப் பற்றியதே என்று எண்ணுவது தவறானது. சாதாரண அறிவு என்றும் விஞ்ஞான அறிவு என்றும் பிரிப்பதற்கு அவன் அறிந்திருக்கிற பொருள் காரணமன்று. அவன் பெற்றிருக்கிற அறிவின் தன்மையைப் பொறுத்தே சாதாரண அறிவென்றும் விஞ்ஞான அறிவென்றும் பாகுபாடு உண்டாகிறது. எந்த ஒரு பொருளையும் பற்றி ஒருவன் பேசலாம், எழுதலாம், விவாதிக்கலாம், அவனுடைய பேச்சிலிருந்து, எழுத்திலிருந்து அவன் அப்பொருளைப் பற்றிய சாதாரண அறிவைப் பெற்றிருக்கிறானா அல்லது அப்பொருளைப் பற்றிய விஞ்ஞான அறிவைப் பெற்றிருக்கிறானா என்பதை நாம் உணர்ந்து கொள்ளலாம். எப்படி?

(1) முழுமை

'தக்காளி' ஒருவகைத் தாவர இனம். தக்காளிப் பழம் உணவுக்கு ஏற்றது என்று கருதி, அதைப் பயன்படுத்தும் பொருட்டு, அச்செடியைப் பயிரிடுகிறான். தக்காளிச் செடியைப் பயிரிடுவதற்குத் தேவையான எல்லாச் செய்திகளையும் சேகரிக்கிறான். தக்காளியைப் பயிரிட வேண்டிய முறை, விதைகள் பற்றியெல்லாம் படிக்கிறான். அவன் தக்காளியைப் பற்றிய அறிவாளியே. விஞ்ஞானி ஒருவனும் அதே தக்காளியை ஆராய்கிறான். இருவருக்கும் உள்ள அறிவு நிலைகளில் உள்ள வேறுபாடு என்ன? தக்காளிப்பழம், செடி ஆகியவைகளைப் பற்றி அறிந்து பயிரிட்டவன் இருக்கிறானே அவனுடைய அறிவானது தக்காளியைப் பற்றிய சில தகவல்களின் தொகுப்பு. அது பயனை அடிப்படையாகக் கொண்ட தனி விவரங்களின் தொகுப்பு. குறைந்த உழைப்பில் நிறைந்த பயனைப் பெறமுடியும் என்பதை மட்டும் அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப் பெற்ற தகவலே அவன் அறிவு. உண்பதற்கோ, மருந்தாகப் பயன்படுத்துவதற்கோ, உரமிடுவதற்கோ அல்லது வேறு வகைகளுக்கோ பயன் தரக்கூடியவைகளைப் பயன் தராதவைகளிலிருந்து பிரித்து அறியும் நோக்கம் ஒன்றையே அடிப்படையாகக் கொண்டு சேகரிக்கப்பெற்ற சில தகவல்களைத் தான் அவன் கொண்டிருக்கிறான். ஆனால் அவனிடம் தக்காளிச் செடியின் வேர் எந்த வகைத் தாவர இனத்தின் வேரைச் சார்ந்தது? தாவரங்களில் தக்காளி எந்த வகைத் தாவர இனத்தைச் சாரும்? தக்காளி தனித் தாவர இனமா?

கூட்டுத் தாவர இனமா? என்பன போன்ற வினுக்களை எழுப்பினல் பதில் சொல்ல மாட்டான். தாவரஇயல் விஞ்ஞானி அத்தகைய வினுக்களுக்கும் விடை கூறுவான். தாவரஇயல் விஞ்ஞானியிடம், ஒரு தனிப்பட்ட இலையைக் கொடுத்து அது பற்றிய விவரங்களைக் கேட்டால், இந்த இலை இந்த வகைத் தாவரத்தைச் சார்ந்தது என்பது முதலாக அனைத்துச் செய்திகளையும் கூறுவான். ஏனெனில் தாவர இயல் விஞ்ஞானியானவன் தாவர இனங்கள் அனைத்தையும் பற்றிய முழுமையான விவரங்களையே நோக்கமாகக் கொண்டு ஆராய்கிருன். சுருங்கக் கூறினல் விஞ்ஞான அறிவு என்பது ஒன்றைப் பற்றிய முழுமையை அடிப்படையாகக் கொண்டது; சாதாரண அறிவோ தனக்குப் பயன்தரக்கூடிய பகுதிகளை மட்டும் அடிப்படையாகக் கொண்டு சேகரிக்கப் பெற்ற சில தகவல்களின் தொகுப்பே என்று முடிவு செய்யலாம்.

(2) பொதுமை.

விஞ்ஞான அறிவுக்குப் பொது உண்மைகளை வரையறுத்துக் கூறும் ஆற்றல் உண்டு. சாதாரண அறிவுக்கு அச்செயல் இயலாத ஒன்று. ஒரு குடியானவனைப் பார்த்து, அவனுடைய அல்லது அவன் வாழும் சுற்றுப்புற வயல்களில் என்னென்ன விளைபொருள்கள் விளையும் என்றும் என்னென்ன உரம் போடப் பெறுகின்றன என்றும் கேட்டால் விடை கூறுவான். உன்னுடைய நிலத்தில் ஆப்பிள் விளையுமா? என்றல் "போட்டுப் பார்த்ததில்லை" என்பான். ஒருவேளை 'விளையாது' என்று சொல்வானேயானல், ஏன்? என்ற கேள்வியை எழுப்பினல் அவனல் பதில் சொல்ல இயலாது. ஏனெனில் நிலங்களின் பாகுபாடுகள், அவைகளின் தன்மை, உரங்களின் வகைகள், பயிர்களின் வகைகள், சாகுபடி முறைகளில் கையாளப்பட வேண்டிய முறைகள் ஆகிய எல்லாவற்றையும் பற்றிய சில பொது விதிகளை அவன் தெரிந்து கொள்ளாமையே காரணம். விவசாயத்துறை விஞ்ஞானி விவசாயம் சம்பந்தப்பட்ட எல்லாச் செய்திகளையும் பற்றிய பொது விதிகளைக் கூறுவான். சில காலங்களில் சில புதுவகைப் பூச்சிகள் தோன்றிப் பயிரை அழிக்கலாம். குடியானவன் பெற்றுள்ள அறிவுக்கு அப்பூச்சி ஒரு புதுமைப் பொருள். அதை அழித்துப் பயிரைப் பாதுகாப்பதற்குரிய அறிவை அவன் சாதாரண அறிவு உண்டாக்காது. விவசாயத்துறை விஞ்ஞானியானவன் பொது உண்மைகளை அறிந்தவன் ஆகையால் பூச்சி, எத்தகைய கால அமைப்பில் தோன்றியது, அதன் அமைப்பு என்ன? எத்தகைய மருந்தைத் தெளித்தால், பூச்சி மட்டுமே அழியப் பயிர் பாதுகாக்கப் பெறும்? என்பவைகளை ஆராய்ந்து மருந்தையும் உண்டாக்கித் தந்துவிடுவான். எனவே பொது விதியை மூலதத்துவங்களை அமைக்கக் கூடிய அறிவுதான் விஞ்ஞான அறிவு என்று கூறப் பெறுகிறது.

(3) திருத்தம்.

சாதாரண அறிவு நிச்சயம் அற்றதாக, தெளிவு அற்றதாக அமையும். விஞ்ஞான அறிவு திருத்தம் பெற்ற அறிவு. காரண காரியத் தொடர்பைப் பலமுறைகளில் பல கோணங்களில் ஆராய்ந்து தெளிவுபடுத்தியமையால் விஞ்ஞான அறிவு திருத்தம் பெற்ற தெளிவான நிச்சயத் தன்மையைக் கொண்டதான அறிவாக அமைகிறது. ஒரு எடுத்துக் காட்டு. பச்சோந்திக்கு நிறம் மாறும் தன்மை உண்டு. நிறம் மாறுவதற்குக் காரணமாக அதனிடம் உள்ள உறுப்பு எது? எனக் கேட்டால், சாதாரண அறிவுடையவன் 'கண்' என்று சொல்லலாம். உண்மையும் அதுவே. ஆனல் கால்கள் தான் காரணம் என்று நாம் சொன்னல்

அதை அவன் இல்லை என்று மறுக்க முடியாதவனாக இருப்பான். சில கேள்விகளைத் தொடர்ந்து கேட்டால் கண் தான் காரணம் என்று சொன்ன அவனே அதை மறுக்கக் கூடத் தயாராகலாம். காரணம் அவன் அறிவு திருத்தம் பெறாத அறிவு. ஆனால் விஞ்ஞானி பலமுறை சோதனை செய்து பார்க்கிறான். பச்சோந்தியின் ஒவ்வொரு உறுப்பாக வெட்டி, வெட்டிச் சோதனை செய்கிறான். 'கண் எடுக்கப் பெற்ற போது தான் நிறம் மாறாதிருக்கிறது என்பதைப் பலவகையான சோதனைகளின் மூலம் கண்டுபிடிக்கிறான். எனவே விஞ்ஞான அறிவு நிச்சயத்தன்மை உடையது; தெளிவானது: திருத்தம் உடையது.

(4) ஒழுங்குபாடு

விஞ்ஞான அறிவு ஒரு ஒழுங்குபாட்டைக் (System) கொண்டதாக இருக்கும், சாதாரண அறிவு என்பது ஏதேனும் ஒன்றின் அடிப்படையில் அமைக்கப் பெறாத தனிமங்களின் தொகுப்பு ஒரு எடுத்துக்காட்டு. புத்தகக் குவியலுக்கும் நூல்நிலையத்துக்கும் உள்ள வேறுபாடே சாதாரண அறிவுக்கும் விஞ்ஞான அறிவுக்கும் உள்ள வேறுபாடு என்று கூறலாம். புத்தகக் குவியலில் உள்ள நூல்களே நூல்நிலையத்தில் வைக்கப் பெறுகின்றன. சில அடிப்படை விதிகளை வைத்து, புத்தகக்குவியலே நூல் நிலையமாக ஆக்கப்பெறுகின்றது. கதைப்புத்தக வரிசை, இலக்கணப் புத்தக வரிசை என்பனபோல புத்தகங்கள் ஒழுங்குபடுத்தப் பெறுகின்றன. சாதாரண அறிவே சில அடிப்படை விதிகளால் ஒழுங்குபடுத்தப் பெறுமானால் விஞ்ஞான அறிவாகலாம். எனவே விஞ்ஞான அறிவு ஒருவகை ஒழுங்குபாட்டைத் தன்னகத்தே கொண்டது என்பதை அறியலாம்.

(5) அளவு:

சாதாரண அறிவுக்கு இல்லாத வேறு ஒரு சிறப்பு விஞ்ஞான அறிவுக்கு உண்டு, பொருள்களின் தன்மையை அறிவதோடு நிற்காமல் அதனை அளவுபடுத்திக் கூறும் ஆற்றலும் வாய்ந்தது. புவியீர்ப்புத் தன்மையை அளவுபடுத்திக் கூறுகிறது. அதனை எதிர்க்கக் கூடிய ஆற்றல் இவ்வளவு வேண்டும் என்று அதனையும் வரையறுத்துக் கூறும் தன்மை விஞ்ஞான அறிவுக்கு உண்டு. திட்டவட்டமான அளவைக் கூறுவதற்காகப் புள்ளிவிவரங்களைத் தேடிப் பாடுபட்டு உழைத்துப் பயன் தருவது விஞ்ஞான அறிவு. மனிதன் சந்திரனுக்குப் போக முடியும் என்று கூறலாம். அது சாதாரண அறிவு இன்ன எடையுடைய இப்பொருள். இத்தனை மணிக் காலத்தில், சந்திரனில் இன்ன இடத்தில் சென்று விழும் என்று கூற வேண்டுமானால் அவ்வாறு கூறும் அறிவு செய்திகளை அளவுக்கு உட்படுத்தித் திட்ட வட்டமாக வரையறுத்துக் கூறும் ஆற்றல் வாய்ந்தது என்பதை உணரலாம்.

முடிப்புரை:

எனவே முழுமை, பொதுமை, திருத்தம், ஒழுங்குபாடு, அளவுபடுத்துதல் முதலியவைகளை இலக்கணங்களாகக் கொண்டு அமைந்ததே விஞ்ஞான அறிவு என்றும், விஞ்ஞான அறிவு வேறு சாதாரண அறிவு வேறு என்றும் வரையறைப்படுத்தித் தெரிந்து கொள்ளலாம். மனோதத்துவ இயலும் (Phychology) அறிவாராய்ச்சியியலும் (Epistenolagy) விஞ்ஞானங்களே என்பதை அவைகள் மேற்கொள்ளும் ஆய்வு முறைகளாலும், ஆய்வுக்குரிய நிலைக்களன்களை அமைத்துக் கொள்ளும் முறைகளாலும் அறியலாம். இரண்டும் விஞ்ஞானங்களே யெனினும் வேறுபாடும் உண்டு என்பதை அடுத்த கட்டுரையிற் காணலாம்.

# திருமால் அடியார் பெருமால்

கச்சி ஆளவந்தார்

அருளாளனாகிய உலகமெல்லாம் உடைய திருமால், அறிவிலாமாக்கள் உணர்வு என்னும் சுடர் விளக்கு ஏற்றி, இருளின் நீங்கி அவியாத மறை முடிவு விளக்கைக் கண்டு நல்லதும் தீயதும் * பகுத்துணர, மறையாய் விரிந்ததும் துளக்கம் இல்லாததுமான விளக்கிற் கொளுத்திய பெருவிளக்குக்களைப் போன்று மறைகளும் கலைகளும் இதிகாச புராணங்களும் (எல்லாவற்றையும் தொழும்பு கொள்ளும் தன் நீர்மையினுல்) அருளிச் செய்தான்.

* பகுத்துணர்விற்குப் பயன் வீடுபற்று, இங்கு வீடு-விடுகை, பற்று-பற்றுகை. இப்படி அக்கடவுள் அருளிய (முடிவாய) வேதாந்தம், வேதம், அங்கம், இதிகாசம், புராணம் முதலிய சுருதி, யுக்தி, அநுபவம் மூன்றற்கும் பயன், விட்டொழித்தற் பாலனவற்றை விட்டகலுதலும் பற்று விடாது கடைப் பிடித்தற்பாலதாகிய கடவுளைப் பற்றுதலும் ஆய இரண்டுமேயாம். முன்னது துன்ப நீக்கம், பின்னது இன்பப்பேறு, பிறர் இவற்றை வெவ்வேறு தொடராற் குறிப்பர். சைவர் பாசவீடு சிவப்பேறு என்பர். வேதாந்தி துக்கநிவிர்த்தி சுகப்ராப்தி; பந்தநிவிர்த்தி பரமாநந்தப்ராப்தி என்பர். தொடரும் பொருளும் ஒன்றுபடினும் அவரவர் நெறியில் உள்ள விளக்கமும் கொள்கையும் வேறுபடும். படினும் பொதுநோக்குணர்வினர்க்கு முடிவாய பயன் வேறுபடாது.

வீடுபற்றுக்கட்குச் செயப்படு பொருள் முறையே துன்பமும் இன்பமும் அன்றிப் பிறிது இல்லை, துன்பம் உறுதல் :—' இன்பு துன்பு அளி பல் மாமாயத்து அழுந்துகை ' (திருவாசிரியம். 6 :-8-10). இன்பத் துன்பங்கட்குக் காரணமும், அழியாததும், கடத்தற்கு அரியதும் ஆன பிரகிருதி சம்பந்தம் பற்றி வரும் பிறவியின் ஒரு காலமும் நீங்காமைக்கு உறுப்பும், பலவகைப் பட்டிருப்பனவும், அகப்பட்டாரைத் தப்பாது தடுப்பனவுமாய்த் தோன்றி அறிவுடையாரையும் கலக்கும் வியப்பூட்டுவனவாய்ப் பற்றும் ஐம்புலனுகர்ச்சியில் அகப்பட்டு, எல்லையில்லாத துயரங்களுக்குக் காரணமாய பிறப்புக்களிலே அழுந்துகை.

தோன்றி என்றதன் விளக்கம் :—நம்மாழ்வார்.

" இன்னமுதெனத் தோன்றி ஓர் ஐவர், யாவரையும் மயக்க நீ வைத்த முன்னமாயம் எல்லாம் முழுவேர் அரிந்து என்னை உன் சின்னமும் திருமூர்த்தியும் சிந்தித்து ஏந்திக் கைதொழவே அருள் எனக்கு என்னம்மா, என்கண்ணா, இமையோர் தம் குல முதலே " என்றருளியதால் பெறலாம்.

இன்பம் உறுதல்.

" களிப்பும் கவர்வும் அற்றுப் பிறப்புப் பிணிமூப்பு இறப்பு அற்று
ஒளிக் கொண்ட சோதியுமாய் உடன் கூடுவது என்று கொலோ
துளிக்கின்றவான் இந்நிலம் சுடராழி சங்கு ஏந்தி
அளிக்கின்ற மாயப்பிரான் அடியார்கள் குழாங்களையே."

என்றருளியவாறே சிறியதாயிருக்கும் இயல்பு, நிலையற்ற பெற்றி

முதலாய குற்றங்களே நிறைந்த ஐம்புலனுகர்ச்சியால் வருந்துயரின் நீங்கி, அந்நுகர்ச்சியைப் பெருமையாலே எய்தும் ஏக்கத்தையும் போக்கி, அறுவகை வேறுபாடும் அகன்று, தூய நற்பண்பாதலின் ஒளிவண்ண மாயிருக்கும் இப்பிரகிருதி சம்பந்தம் உருத திருமேனியைப் பெற்று, மாமணிமண்டபத்து அந்தமில்(லாப்) பேரின்பத்துள் (பரமபதத்துள்) அடியார்கள் குழாங்களை உடன் கூடி,

> வழிபட்டு ஓட அருள்பெற்று மாயன் கோல மலரடிக்கீழ்
> சுழிபட்டோடும் சுடர்ச்சோதி வெள்ளத்து இன்புற்றிருத்தல்.

அஃதாவது எந்நேரமும் பகவானை அநுபவிப்பதாலே பூரணாநந்தனாகி யிருக்கை.

இவ்வாறு துன்பமும் இன்பமும் முறையே மாக்களுக்கும் மக்களுக்கும் உண்டாதற்கு அடி(ஹேது) என்ன? இங்குத் துன்பத்தைப் பற்று (பந்தம்) என்றும் இன்பத்தை வீடு (மோக்ஷம்) என்றும் கருதிக் கொண்டு விளக்கம் உறல் நன்று.

> பற்றுக்கு அடி ஐம்பொருளுணர்வு இல்லாமை
> வீட்டுக்கு அடி ஐம்பொருளுணர்வு உடைமை

அர்த்தபஞ்சகம் = ஐம்பொருள். அர்த்தம் = பொருள், பஞ்சகம் = ஐம்மை, ஞானம் = உணர்வு, அர்த்தபஞ்சகஞானம் = ஐம்பொருளுணர்வு.

ஐம்பொருளாவன :–

> " மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர் நிலையும்
> தக்க நெறியும் தடையாகித் தொக்கியலும்
> ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்
> யாழினிசை வேதத் தியல்."

என்னுந் தனியனாலுணரப்படும் பொருள் ஐந்தும் அர்த்தபஞ்சகம் எனப்படும்.

'ஆசாரிய விருதயம்' எனப்பெயரிய பெறலரிய திருவருணூலில், 5 ஆவது மந்திரத்தில் அநந்த கிலேசஹேது என ஐந்தும் நிரதிசயாநந்த ஹேது என ஐந்தும் ஆக உபதேசம் உள்ளன. 1. மெய்ப்பொருளுணர் வின்மை 2. தன்னையறியாமை 3. தற்பகையறியாமை 4. மெய்ந்நெறி யறியாமை 5. பேறறியாமை என்னும் ஐந்தும் ஹேதுவாக எல்லை யில்லாத் துன்பம் உண்டாகின்றது. 1. மெய்ப்பொருளுணர்வு 2. தன்னையுணர்தல் 3. தற்பகையை அறிதல் 4, மெய்ந்நெறியுணர்வு, 5. பேற்றுணர்வு ஐந்தும் ஹேது ஆகத் திருமாலை நுகரும் பேரின்பம் எய்துகின்றது. முன்னைந்தும் அறிவிலர்க்குத் துன்பம் ஆக்குவன. பின்னைந்தும் உணர்வினர்க்கு அழியாத திருவருளின்பத்தை ஆக்குவன. அத்துன்பங்களை நீக்குவனவும் இவையே.

இராசதகுணத்திலும் தாமத குணத்திலும் மிக வூன்றியிருக்கும் மடவோர் அறியாமையுள் அழுந்தித் துயரமே அநுபவிப்பர். சத்துவ குணத்தில் மிக்கூன்றியிருப்பவர் மெய்யுணர்வினர். அவர்க்குப் பகவானை நுகரும் வீடு ஒன்றே பயனாகும்.

மேற்கூறிய ஐம்பொருளுணர்வைப் பெறும் வகையை நோக்குதல் நன்று. உயிர் சார்பால் அடையும் நலம் பொலங்களை அறியாதேல் கேடுறும், சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகல் வேண்டும், இன்றேல், எல்லாப் பொருட்கும் சார்பாய செம்பொருளையுணரவும், இருவேறு பற்றும் அற ஒழுகவும் வல்லதன்றாய் விடும் உயிர். சார்புகெடச் சார்புணர்ந்து கொண்டொழுகும் உயிர்க்கு, அவ்வுணர்வையும் ஒழுக்கத்தையும் அழித்துப் பின் சாரக் கடவனவாய் நின்ற துன்பங் களில்லா தொழியும். இங்குப் பரிமேலழகருரைச் சிறப்பை (359) அறிஞர் நோக்குக.

(1) மருளாய அசித்துச் சார்பால் அறியாமை, அதனால் அறம் மறம், அதனால் பிறப்பு, அதனால் இராசததாமத குணம், அதனால் ஐம்பொருளுணராமை, அதனால் கட்டுத்துயர் (பந்ததுக்கம்) *

(2) திருமாலைச்சாரும் அருட்சார்பால் † * (ஸௌஹார்தம்) ஆண்டானடிமைத் திறம், அதனால், கடவுள் கருணை, அதனால், கருவிலே திருவுடையனாகக் கடவுளது கடைக் கண்ணோக்கம் பெறல், அதனால் ஐம்பொருளுணர்வுடைமை, அதனால் வீடுபேறு.

ஐம்பொருள்

| (1) உயிர் நிலை (தன்னுண்மை (ஸ்வஸ்வரூபம் | (2) இறைநிலை (பரஸ்வரூபம்) | (3) தக்கநெறி (புருஷார்த்த ஸ்வரூபவம்) |
|---|---|---|
| 1. நித்தியர் | 1. பரத்வம் | 1. தர்மம் (அறம்) |
| 2. முத்தர் | 2. வியூஹம் | 2. அர்த்தம் (பொருள்) |
| 3. பத்தர் | 3. விபவம் | 3. காமம் (இன்பம்) |
| 4. கேவலர் | 4. அந்தர்யாமித்துவம் | பேரின்பம், வீடு |
| 5. முமுட்சுக்கள் | 5. அர்ச்சாவதாரம் | 4. ஆத்மாநுபவம் |
| | | 5. பகவதநுபவம் |

| (4) வாழ்வினை (உபாயஸ்வரூபம்) | (5) பகையியல்பு (ஊழ்வினை ஸ்வரூபம்) |
|---|---|
| 1. கருமயோகம் | 1. ஸ்வரூபவிரோதி |
| 2. ஞானயோகம் | 2. பரத்வவிரோதி |
| 3. பக்தியோகம் | 3. புருஷார்த்தவிரோதி |
| 4. ப்ரபத்தி (அடைக்கலம்) | 4. உபாயவிரோதி |
| 5 குருபக்தி | 5. ப்ராப்திவிரோதி |

---

* ஸுஹிர்தம்-ஸௌஹார்தம். ஆத்மோஜ்ஜிவநத்துக்கு அவன்க்ருஷி பண்ணுகையில் இழிகைக்குமூல காரணம்,

† ஈசுவரனது சிநேகம் ஈச்வரயச்யச ஸௌஹார்தம் என்பது பிரமாணம்.

ஐம்பொருளும் அவற்றின் உட்பிரிவும் இப்படியே உணர்க. இரண்டாவது பிரிவு முதற் கட்டுரையுள் எழுதப்பட்டது, பரத்வாதி பஞ்சகம் அர்த்த பஞ்சகத்துள் உணர்த்தப்படும் மரபு இதனால் அறியப்படும், அர்த்த பஞ்சகத்துள் முதல் நான்கற்கும் சேதனனது பேற்றுக்கும் விரோதியே இறுதியாய பஞ்ச விரோதியாம்.

வைணவத்தில் முப்பொருளுண்மை (தத்துவத் திரயம்) கூறுங்கால், சேதநப் பொருள், அசேதநப்பொருள், அவ்விரண்டனையும் உடையவன் என்பர் முன்னுசிரியர். பொருள்-உடைமை, ஐசுவரியம், பொருளன்-உடையவன், ஈசுவரன், ஈசுவரனதுடைமை ஐசுவரியம், அசேதனத்தைக் குறித்து உடைமை உடையான் என்றும், சேதனத்தைக் குறித்து அடிமை ஆண்டான் என்றும் வழங்கினர்.

சைவத்திலே பசு பாசம் பதி என்றல் போன்று வைணவத்தில் இத் தத்துவத்திரயம் உளது. பசு-சேதநன், பாசம்-அசேதநம், பதி-ஈசுவரன் தமிழிலே பதியைக் கடவுள் (ஸர்வவ்யாபகன்), இயவுள் (ஸர்வநியாமகன்) இறைவன் (ஸர்வரக்ஷகன்) என்பர், வைணவத்திலே ஈசுவர தத்துவத்தை விளக்கும் இடத்தில் இம்முப்பெயரையும் குறிப்பதுண்டு.

மால் என்பது பல பொருள் தநும். இங்குப் பெருமால் என்பது பேரன்பு என்ற கருத்தினது. ஒன்றனையுட் கொண்டு அதனை அடைவதில் வைத்த அன்பு மாறுதல் உருது பெருகுவதை மால் என்பர். சதுர் இழந்து அறிமால் கொண்டு சாருங்கதி' 'சதுரை மறந்து அறிமால் கொள்வர் சார்ந்தவர் சாற்றிச் சொன்னேம்' 'தீர்ப்பரிய ஆநந்தமால் ஏற்றும் அத்தன்,' பெருமாநிலத்தில் அருமாலுற்றேன், என்றென்று சொரிந்தகண்ணீர் 'தேவுமால் கொண்டான்' 'அருண்மால்', நேயமால், மையற்றுழனி என்பன முதலிய பல இடத்தும் இச்சொல்லாட்சி இப் பொருளில் உண்டு, மையல்; மயல், மால் எனத்திரிந்தது. தையலார் மையல் போன்று திருமாலிடத்தில் அடியார்க்கு மையல் உண்டு.

புலனைந்தும் தானே பொரமயங்கிச் சிந்தை
அலமந்துழலும் அடிமை-நலமிருந்த
சித்தான மோன சிவனேநின் சேவடிக்கே
பித்தானல் உண்டோ பிறப்பு, (தாயுமானுர்) என்றதும் பெருமாலே.

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை-அறப்பித்துப்
பத்தர் இனத்தாய்ப் பரனுணர்வினல் உணரும்
மெய்த்தவரை மேவா வினை.

இதில், பித்து-மால், பத்தர்க்குமால் இன்றியமையாதது என்பது புலனுகும். வினைதீரும் வழி அதுவே.

மஹாமஹோபாத்யாயராக ப்ரகாசிக்கும் பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீலஸ்ரீ அண்ணங்காசார்ய ஸ்வாமிகள் அவர்கள் வைணவத் தமிழ்க்குச் செய்யும் உதவிபோல் கோடியுள் ஒருகூறு ஆதல் செய்யக் கடவர் உரியோர். அது செய்யாரேல், வைணவ நூல் ஒன்றும் கிடைக்காது.

(வளரும்)




# பழநி ஆண்டவர் சிறப்பு

[புலவர் திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,]

## முன்னுரை :

பழநி என்பது முருகன் தலங்களுள் மிகவும் முதன்மையும் சிறப்பும் வாய்ந்தது. பழநி என்பது, பொதினி என்னும் சங்க காலச் சொல்லி னின்று தோன்றியதென்று ஆராய்ச்சியாளர்கள் கூறுவது உண்டு. எனினும் சமய உலகில் புராண நூல்களில் இதற்கு வேறுவகையான விளக்கம் கூறப்பெறும். மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களைக் குறிப்பதாகக் கூறப்படும் முருகனின் ஆறு படை வீடுகளுள், பழநி மூன்றாவதாகத் திகழ்கின்றது. இதனைத் திருவாவினன்குடி என்றும் குறிப்பிடுவர். ஆவியர் குடியில் தோன்றிய வையாவிக்கோப்பெரும் பேகன் என்னும் சங்ககால வள்ளல் வாழ்ந்த இடமாதலின், இதற்கு "ஆவிநன்குடி" எனப்பெயர் அமைந்தது. திருமகள் காமதேனு சூரியன் நிலமகள் அக்கினி என்போர் வழிபட்டு அருள்பெற்ற தலமாதலின், இதற்குத் திருவாவினன்குடி (திரு + ஆ + இனன் + கு + டி) எனப்பெயர் வழங்க லாயிற்று என்பது, இதற்குப் புராண நூல்கள் தரும் விளக்கம் ஆகும்.

## பழநி ஆண்டவர்

திருவாவிநன்குடி என்னும் பண்டைப் பெயரையுடைய பழநி என்னும் பழம்பெரும் பதியில் எழுந்தருளி விளங்கும் பரமனாகிய ஆண்டவனுக்கே பழநி ஆண்டவர் என்று பெயர். அன்பர்கள் நினைந்து வழிபடும் திருவுருவங்களை மேற்கொண்டு அருள்புரியும் இயல்பினனாகிய முருகப் பெருமானுக்குச் சிற்பநூல்களில் பலவகையான அழகிய திருவுருவங்கள் கூறப்பெற்றுள்ளன. இத்திருவுருவங்களுள் கந்தசுவாமி என ஒரு திருவுருவம் உண்டு. ஒரு முகமும் இரண்டு கைகளும் உடையவராய், வலக்கையில் தண்டாயுதம் ஏந்தி, இடக்கையை இடுப்பில் வைத்துக் கொண்டு கோவணம் உடுத்திய நிலையில், செந்தாமரை மலர் போன்ற நிறத்துடன் நின்ற திருக்கோலத்தில் காட்சி கொடுத்தருள்பவர், கந்த சுவாமி எனப்படும் திருவுருவம் என்று, சிற்பநூல்கள் கூறும். இவரே பழநியாண்டவர் என வழங்கப்படுபவராவர். கையில் ஞானமாகிய தண்டாயுதம் ஏந்தியிருத்தல்பற்றி, இவருக்கு ஞானதண்டாயுதபாணி எனவும் ஒரு சிறப்புப் பெயர் வழங்கும். தண்டாயுதபாணியாகிய கந்த சுவாமிக்கு மக்களிடையிற் பழநிஆண்டவர் என்ற சிறப்புப் பெயரே பெரு வழக்காகப் போற்றி வழங்கப்பட்டு வருகின்றது.

உத்தமநிலே :

உலகியல் வாழ்க்கையில், ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு குறிப்பிட்ட காலத்தில், என்றேனும் ஒருநாள், பண்பட்ட மனப்பக்குவம் ஏற்பட்டு, விருப்பு வெறுப்பற்றுப் பரந்த மனப்பான்மையுடைய, பற்றற்ற தன்மை உண்டாதல் திண்ணம். அந்நிலேயிலேயே அவன் தன்நலம் இன்றி, உலக நலம் குறித்துப் பெரிதும் உழைக்கும் உயரிய குறிக்கோள் உடையவனுக விளங்கப்பெறுகின்ருன். பற்றற்ற தூய மனப்பண்புடன் உலக நலம் கருதி உழைக்கும் உயரிய பெருந்தகைமையாளனே, உத்தமன் என்று போற்றப்படுவான், அத்தகைய உத்தமர்களாலேயே உலகம் நின்று நிலவி அழிந்துபடாமல் இருந்து வருகின்றது எனப் புறநானூறும் திருக்குறளும் புகலுகின்றன.

"உண்டால் அம்ம! இவ்வுலகம்....
தமக்கென முயலா நோன்ருட்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"

—புறநானூறு, 182.

"பண்புடையார்ப் பட்டுண் டுலகம், அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்"

—திருக்குறள், 1006

இங்ஙனம் தன்னலம் நீத்து, மன்பதை நலம் குறித்துப் பற்றற்ற தன்மையுடன், மனிதன் வையத்து வாழ்வாங்கு வாழ்தல் வேண்டும் என்னும் உயரிய உண்மையினேயே பழநியாண்டவர் திருவுருவம், நமக்குப் பண்புற விளக்கிக் கொண்டு திகழ்கின்றது.

ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணம் :

முருகப்பெருமான் குழந்தைகளுக்குக் குழந்தைவேலன் ஆகவும், இளேஞர்களுக்குப் பாலசுப்பிரமணியன் ஆகவும், கலேஞர்களுக்கு சண்முக நாதன் ஆகவும், வீரர்களுக்குத் தேவசேனுபதி ஆகவும், மந்திர உபதேசம் பெற விரும்பி மாணவநிலேயில் வழிபடும் அன்பர்களுக்குச் சுவாமிநாதன் ஆகவும், இல்லற நிலேயினர்களுக்கு வள்ளி தெய்வயானே உடனுறை சுப்பிரமணியசுவாமி ஆகவும், பற்றற்ற தூய ஞானத்துறவற நிலேயினர்க்குப் பழநியாண்டவர் ஆகவும் பிறவாறும் விளங்கி, அவரவர்க்கு ஏற்ற நிலேகளில், பலவேறு வகைகளில், ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணம் அறிந்து, அருள்புரிந்து காத்து வருகின்ருன்.

உலகியற் பற்றிலா உணர்வு :

"உபநிடத காலம் தொட்டே நாம் உலகுக்கு ஒரு பெரிய அறைகூவலே விடுத்திருக்கின்ருேம். அழியாத் தன்மை அடைவது செல்வத்தினுலோ அன்றி சந்ததியினுலே இல்லே. துறவு நெறியுணர்வினுலேயே ஆகும்.

ஒவ்வோர் இனமும் வரிசையாக இந்த அறைகூவலே ஏற்றுக் கொண்டு, தங்களால் இயன்ற வரையில் முயன்று, உலகச் சிக்கல்களே ஆசாபாசங்களால் விடுவிக்க முயன்றுள்ளன. கடந்த காலத்தில் அவைகளெல்லாம் தோற்றுப்போயின. பொருளும் பதவியும் காரண மாக எழும் சூழ்ச்சி-வஞ்சகம்-துன்பம் முதலிய சுமைகளால் நலிவுற்று, அப்பழைய இனங்கள் யாவும் மறைந்தொழிந்தன. புதியனவும் கூட

நிற்கமுடியாமல் தள்ளாடிக் கொண்டுள்ளன. அமைதியா போரா, பொறுமைத் தன்மையா பரபரப்புணர்வா, நல்லியல்பா வல்லியல்பா, உடல் வலிமையா அறிவு வலிமையா, உலகாயதமா ஆன்மீகமா, இவற்றுள் எது முடிவில் வெற்றி பெறும்? என்பது இனிமேல் தான் தெரியும்.

"ஆனுல் எவ்வளவோ காலத்திற்கு முன்பே, நாம் நம்முடைய சிக்கல்களைத் தீர்த்துக்கொண்டு விட்டோம். ஆகூழ்-போகூழ் இரண்டிலும் கடைசி வரையிலும், அதனையே கடைப்பிடித்து ஒழுகக் கருதியுள்ளோம். நம்முடைய தீர்வு: உலகியற் பற்றிலா உணர்வும்-தூய துறவுநெறி வாழ்க்கையுமே யாகும் "(1) எனச் சுவாமி விவேகானந்தர் அவர்கள், தம் சொற்பொழிவு ஒன்றிற் குறிப்பிடுகின்ருர். அஃது ஈண்டு நாம் எண்ணியுணர்தற்கு உரியது.

பற்றற்ற தூய துறவு நிலையே, உலகில் மனித வாழ்வின் வளர்ச்சிப் படிநிலைகளுள் முடிபாகச் சிறந்து நிற்பதாகும் (2). "மகவெனப் பல்லுயிர் அனைத்தையும் ஒப்ப நோக்கும்" பரந்த மனப்பான்மையும், பற்றற்ற தூய துறவொழுக்கப் பண்பும், எளிய இனிய நல்ல குழந்தையுள்ளமும், உயரிய சிறந்த பல குறிக்கோளும் வாய்க்கப்பெறுதலே, மனித வாழ்வின் உயர்வற உயர்ந்த பெருஞ் சிறப்பு வளர்ச்சி நிலையாகும். இதனை மக்களாகிய நாம் அனைவரும் எய்திச் சிறப்புறுதல் வேண்டும் என்னும் உண்மையினைத் தெள்ளிதின் உணர்த்துவதே பழநி ஆண்டவர் திருவுருவம் எனலாம்.

துறவும் தவமும் :

துறவு நெறி-தவவாழ்க்கை என்னும் இரண்டின் சிறப்பும், இனையன என்று எல்லையிட்டுச் சொல்லுதற்கரியன.

---

(1) "As far back as the days of the Upanishads, we have thrown the challange to the world—'Na dhanena na prajaya tyagenaike amritatwam nashuh—not by wealth, not by progeny, but by *renunciation* alone immortality is reached'. Race after race has taken the challange up, and tried their utmost to solve the world-riddle on the plane of desires. They have all failed in the past,—the old ones have become extinct......we have solved our problem ages ago and hold on to it through good or evil fortune, and mean to hold on to it till the end of time. Our solution is *unworldliness—renunciation*"

—*Sri Swamy Vivekanandar*

(2) "Hinduism has given us in the form of the Sannyasin, its picture of the ideal man......The ideal of the Sannyasin has ever an appeal to the Indian mind..."

—*Dr. S. Radhakrishnan*

துறவே துன்பம் பலபோக்கும் துறவேஇன்பம் பலவாக்கும்
துறவே கொடிய தன்னலத்தைத் தொலேக்கும், உயிர்கள் தமைப்
[புரக்கும்
துறவேதுரிசு பல அகற்றும், துறவே தூய்மை உண்டாக்கும்
துறவே இறையைச் சார்விக்கும் துறவின் பெறுமை சொலல்
[எளிதோ ?

தவமே மேலாம் நெறியாகும் தவமே சித்தி பலபயக்கும்
தவமே துறக்கம் அடைவிக்கும் தவமே நரனைத் தேவாக்கும்
தவமே சிறந்த வாழ்வாகும் தவமே ஞானம் தனைக்கொடுக்கும்
தவமே இறைவன் அருள்பயக்கும் தவத்தின் உயர்ந்த தொன்றில்லை
—மாதவச் சிவஞான சுவாமிகள்.

இத்தகைய துறவு நெறிச் சிறப்பு, தவவாழ்க்கையின் மேன்மை ஆகியவற்றைக் குன்றின் மேல் இட்ட விளக்கென, உலகுக்கெல்லாம் உணர்த்தி நிற்கும் சிறப்புடையதே, பழநி ஆண்டவர் திருவுருவம் எனலாம்.

தவநிலையோர் :

இதுபற்றியே சைவசித்தாந்தச் சான்றோராகிய அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகள், தமது சிவஞானசித்தியார் செய்யுள் ஒன்றில், "தவநிலையோர் தெய்வம்" என முருகப் பெருமானைக் குறித்து மொழிந்துள்ளார். அஃது ஈண்டுச் சிந்தித்து இன்புறுதற்குரியது. பழநி ஆண்டவர் "தவநிலையோர் தெய்வம்" எனத் திகழ்தல் குறித்தே, ஆசிரியர் நக்கீரர் தமது திருமுருகாற்றுப்படையில், திருவாவிநன்குடி பற்றிய பகுதியில், ஏனைய எல்லாத் தேவர்களெல்லாம், தங்களைத் தொடர்ந்து பின்னே வர, துறவு நெறி மேற்கொண்டு தவவாழ்க்கை நடாத்துகின்ற முனிவரர்கள் மட்டுமே, முற்படச் சென்று முருகனைத் தொழுது மகிழ்கின்றனர் எனச் சிறந்தெடுத்துக் கூறியிருக்கின்றார். பழநி ஆண்டவர் "தவநிலையோர் தெய்வம்" என்பதை இஃதுணர்த்தும்.

நீத்தார் பெருமை :

சுருக்கமாகக் கூறலுறின், ஆசிரியர் திருவள்ளுவர் தம்முடைய திருக்குறளில், "நீத்தார் பெருமை" எனக்கூறிய அதிகாரத்திற்கும், "பொறிவாயில் ஐந்தவித்தான்" என இறைவனைக் குறிப்பிட வழங்கிய பொருள் பொதிந்த தொடர்க்கும், சிறந்த இனிய எடுத்துக் காட்டாகத் திகழ்வது, பழநி ஆண்டவர் திருவுருவம் எனக் கூறி முடித்தலும் பொருந்தும்.

முடிவுரை :

பழநி ஆண்டவர் காட்சிக்கு எளியவர் ! கருணைக்கு இனியவர்! குணம் என்னும் குன்றேறி நிற்பவர். "அடல் வேண்டும் ஐந்தன்புலத்தை, விடல் வேண்டும் வேண்டிய எல்லாம் ஒருங்கு" என நம்மனோர் அனைவர்க்கும் அறிவுறுத்தியருள்பவர். குழந்தை உள்ளம் படைத்தவர். எளிதாகவும் விரைவாகவும் அருளை இனிது வழங்கும் இயல்பினர். அதனாலேயே அப்பெருமானை, அடியவர் உலகம் மீக்கூறிப் போற்றித் துதித்து வழிபட்டு மகிழ்ந்து வருகின்றது. கலியுகத்திற் "கண்கண்ட தெய்வம்" என விளங்கி வரும் பழநி ஆண்டவர் தம் பெருமை பகர்தற்கு எளியதோ ?

# திருநாவுக்கரசர் செந்நெறி

[திரு. க. கலியாணம், எம்.ஏ.,]

உலகில் பலசமயங்கள் உள்ளன. அவற்றின் தலைவர் பலர் இருந்தனர். அவர் தம் சமயங்களைப் பரப்பவும், நிலை நாட்டவும் பட்ட இன்னல்கள் பல. ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டார்; முகம்மது நபிகள் கல்லால் எறியப் பெற்று ஊர் ஊராக விரட்டியடிக்கப் பட்டார்; புத்த பகவான் தவமியற்றும் போது பல துன்பங்களுக்குள்ளானார். அது போன்றே சைவசமயத் தலைவரும் பல துன்பங்களுக்கு ஆளாயினர். அவருள் எல்லையற்ற தொல்லைக்கு ஆட்பட்ட திருநாவுக்கரசு நாயனார் திருவடிப்பேறுபெற்றநாள் சித்திரைச் சதயம். அந்நாள் பிரமாதீச ஆண்டு சித்திரை 16-ஆம் நாள் (28-4-1973) அன்று வருகிறது. அதை நினைவு கூருமுகத்தான் அவர் வரலாற்றையும், ஆற்றியதொண்டினையும் பற்றிச் சிந்திப்போமாக.

அப்பர் பெருமான் இந்நிலவுகில் வாழ்ந்தது 81 ஆண்டுகள். ஆராய்ச்சியாளர் கி.பி. 575 முதல் 656 வரை இருந்திருக்கலாம் என்று கருதுகின்றனர். அவருக்குத் தண்டனைகள் கொடுத்த பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் கி.பி. 600 முதல் 630 வரையில் அரசாண்டான். "திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரையன்றன் அடியார்க்கும் அடியேன்" என்று சுந்தரர் புகழ்ந்து போற்றுகிறார். நிலைத்த இன்பம் தரும் முத்திநிலையே திருநின்ற செம்மை. வாகீசப் பெருந்தகையாரே "சிவனெனும் ஓசையல்லதறையோ வுலகில் திருநின்ற செம்மையுளதே" என்று அருளுகிறார். அவர் பிறப்பைக் கூறவந்த சேக்கிழார் "உலகில் வரும் இருள் நீக்கி ஒளி விளங்கு கதிர் போல மலரும் மருணீக்கியார் வந்து அவதாரம் செய்தார்" என்று கூறுகிறார். அவர் திருக்கூட்டச் சிறப்பில் கூறியிருக்கும் அடியவர் இலக்கணங்கள் அனைத்துக்கும் இலக்கியமாகத் திகழ்ந்தவர் அப்பர் பெருமான் என்பது கூறுதேயமையும். "ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்" என்பதை அவர் உழவாரத் தொண்டு செய்யும்போது கல்லோடு பொன்னும் மணியும் கலந்து வந்ததை வாரிப்பொய்கையில் எறிந்த செயலால் காண்கிறோம். 'கூடும் அன்பினில் கும்பிடலே' யன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினார்" என்பதை "அண்டர் வாழ்வும் அமரரிருக்கையும் கண்டு வீற்றிருக்கும் கருத்தொன்றிலோம்.......மயிலாடு துறையரன் தொண்டர்பாதம் சூடித் துதையிலே" என்னும் திருவாக்கால் அறியலாம். "ஈரநெஞ்சினர்" என்பதற்கு விடம் தீண்டிய அப்பூதியடிகளின் மகனை எழுப்பியதே போதிய சான்றாகும். "வீரம்" என்பதற்கு "நாமார்க்கும் குடியல்லோம்" என்ற பாடலே எடுத்துக்காட்டு. "பூதம் ஐந்து நிலையில் கலங்கினும் மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்" என்பதை "வானந்துளங்கிலென் மண்கம்பமாகிலென்" என்ற திருவாக்கால் பெறலாம். "கைத்திருத்தொண்டு செய்கடப்பாட்டினார்" என்பதற்கு "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற அருள்வாக்கே சிறந்த சான்று. சமணர்கள் பழையாறையில் மறைத்து வைத்த சிவன் கோயிலை வெளிப்படுத்த உண்ணாவிரதமிருந்தார். இந்தச் செயற்கரிய செயலைச் சேக்கிழாரடிகள் "வண்ணங்கண்டு நானும்மை வணங்கியன்றிப் போகேன் என்று எண்ணமுடிக்கும் வாகீசர் இருந்தார் அமுது செய்யாதே" என்று விதந்து பேசுகிறார். உண்ணாவிரதம் அரசனைக் கதி கலங்கச் செய்தது. மறைத்த கோயிலை வெளிப்படுத்தினான் மன்னவன்.

"பதிகம் ஏழெழுநூறு பகருமா கவியோகி" என்று அப்பரை நம்பியாண்டார் நம்பி புகழ்ந்து கூறுகிறார். 4,900 திருப்பதிகங்கள் பாடிய

தாகத் தெரிவிக்கிறார். ஆனால் நமக்குக் கிடைத்திருப்பவை 312 பதிகங்களிலுள்ள 3066 பாடல்களே. அவற்றை 4, 5, 6 திருமுறைகளாக ஆன்றோர் வகுத்திருக்கின்றனர். நான்காம் திருமுறை பண்ணமைந்த பதிகங்களையுடையது. ஐந்தாம் திருமுறை திருக்குறுந்தொகையான 100 பதிகங்கள் அடங்கியது; ஆறாந்திருமுறை திருத்தாண்டகப் பதிகங்களைக் கொண்டது.

அப்பர் சுவாமிகள் செயற்கரிய செயல்களை நிகழ்த்திய போது பாடியருளிய பதிகங்களை அற்புதத் திருப்பதிகங்கள் என்பர். 'கூற்றாயின வாறு' என்பது சூலை நோய் தீரப்பாடியது; 'மாசில்வீணை' என்பது நீற்றறையில் இட்டபோது அருளியது; 'சுண்ணவெண் சந்தனச் சாந்தும்' என்று தொடங்குவது யானையை ஏவிய போது ஓதியது; 'சொற்றுணை வேதியன்' என்றது கல்லிற் கட்டிக் கடலில் பாய்ச்சிய போதும், "ஈன்றாளுமாய்" என்று தொடங்கும் திருப்பதிகம் கடலினின்று கரையேறிய போதும் பாடியவை; "பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம்" என்று தொடங்கும் திருப்பதிகம் இறைவனை இடபக் குறி சூலக்குறி வேண்டிப் பாடியது; "கோவாய் முடுகி" என்ற திருப்பதிகம் திருவடித் தீட்சைபெற வேண்டியது; 'பண்ணினேர் மொழியாள்' என்ற திருப்பதிகம் திருமறைக்காட்டில் அடைத்த கதவம் திறக்கப் படைத்தருளியது; 'மாதர்ப் பிறைக்கண்ணியானை' என்று தொடங்கும் பதிகம் கயிலைக் குளத்தில் மூழ்கித் திருவையாற்றுப் பொய்கையில் எழுந்து இறைவன் திருக்கோலக் காட்சியைக் கண்டு களித்துத் திருவாய் மலர்ந்தருளியது; 'ஒன்று கொலாம்' என்று தொடங்கும் திருப்பதிகம் அப்பூதியடிகளின் புதல்வர் விடந்தீண்டி யிறந்தவனை உயிர்ப்பிக்கப் பாடியது. பல இடங்களில் ஐந்தெழுத்தின் பெருமையைப் போற்றிப் பாடியுள்ளார். அவற்றில் ஓர் இடத்தை ஈண்டுச் சுட்டிக் காட்டுவது இன்றியமையாதது. அவர் அருளிய மூன்று திருமுறைகளுள் ஐந்தாவது திருமுறை நடுவணது; அதில் உள்ள பதிகங்களுள் 51-ஆம் பதிகம் அதன் நடுவேயுள்ளது; அதில் நடுவாக இருக்கும் ஆறாம் பாசுரத்தில் "மறவாது சிவாய என்று எண்ணினார்" என்று நடுநாயகமாக விளங்குகிறது. இப்படி அமைந்த திருவருளுக்கு நாம் யாது கைம்மாறு செய்ய வல்லேம்!

அவருடைய நீண்ட நாள் வாழ்க்கை அனுபவத்தில் முதிர்ந்து மலர்ந்து வெளிவந்த அறவுரைகள் மிகப்பலவாகும். 'நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே', 'மாட்டைத் தேடி மகிழ்ந்து நீர் நும்முளே நாட்டுப்பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்', 'வேம்பினைப் பேசி விடக்கினையோம்பி', 'பிண்டத்தைக் கழிக்க வேண்டில் பிரானையே பிதற்றுமின்கள்', 'பொக்கம் பேசிப் பொழுது கழியாதே', 'பிறவி நீங்கப் பிதற்றுமின் பித்தராய்', 'சாத்திரம் பலபேசும் சழக்கர்காள் கோத்திரமுங் குலமுங் கொண்டென் செய்குவீர்', 'ஈசன் எனுங்கனி இனிது சாலவும் ஏசற்றவர்கட்கே' என்பன போன்றவை மக்கள் உய்தி பெறப்பாடியவை.

திருநாவுக்கரசரின் திரிகரணங்களும் இறைவன்பால் சென்று நின்றன. மனம் சிவபெருமானை நினைந்துருகியது; வாக்கு அவன் பெருமையைப் பாடப் பயன் பெற்றது; காயம் உழவாரத் திருத்தொண்டில் ஈடுபட்டது. அண்மையில் வருகிற அவருடைய சதய நன்னாளைக் கொண்டாடும் வகையில் கோயில்களிலெல்லாம் உழவாரத் திருத்தொண்டு செய்வோமாக. அவர் வாழ்ந்து காட்டிய செந்நெறியில் செல்வோமாக. அவர் அறவுரைகளைப் பின்பற்றி உய்வோமாக.

திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறி வாழ்க.

# ஆழ்வார் போற்றும் இராமபிரான்

திரு. ர. வேங்கடரத்தினம்

இராமபிரான் எவரையெல்லாம் தம் தோழராக்கிக் கொண்டார் என்பதில் திருமங்கையாழ்வார்க்கு வியப்பு! ஏழை, எளியவன், கீழ்மகன் என்று ஏதும் மனத்தில் நினைப்பாரா நம் அண்ணல்? தம்மை அண்டியவர் அனைவரையும் தமக்கு இணையாய்க் கருதி ஏற்கும் பண்பு இராமபிரானின் குண நலன்களுள் தனிச்சிறப்பு அம்சம் ஆகும். அதைத் திருமங்கை மன்னன் பாடுவார்.

ஏழை ஏதலன் கீழ்மகன் என்னு(து)
இரங்கி மற்றவற் (கு) இன் அருள் சுரந்து
மாழைமான் மடநோக்கி உன்தோழி
உம்பி எம்பி என் (று) ஒழிந்திலை உகந்து
தோழன் நீ எனக்(கு) இங்கொழி என்ற
சொற்கள் வந் தடியேன் மனத்திருந்திட
ஆழிவண்ண! நின் அடிஇணை அடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே.

இராமபிரான் குகனை உவந்தேற்றதோடு நில்லாது, நீ என் நண்பன் என அவனிடம் கூறி அவனைத் தம் அடியார் குழாத்தில் சேர்த்துக் கொண்ட பேருளைப் புகழ்வது இப்பாசுரம். கீழோன், மேலோன் என்பன போன்ற எண்ணங்களுக்குத் தெய்வ சந்நிதானத்தில் இடம் இல்லை என்ற கோட்பாட்டினை வாழ்ந்து காட்டுவதற்காக வந்துதித்த அண்ணல் இராமபிரான்; அந்தத் திருமூர்த்தத்தினை ஆழ்வார் திருவரங்கப் பதியிலே தரிசித்து மகிழும் போது எழும் பாடல் இது!

குகனுக்குப் பிராட்டி ஒரு தோழியாயும், ஐயன் தோழனுயும் ஆன கதை அடியார் உலகில் இறைவனின் எளிமைக்கு என்றுமே சான்று பகரும் சிரஞ்சீவி வரலாறு அன்றோ?

நம்மாழ்வார்க்கு இராமபிரான் மீது உள்ள ஈடுபாட்டினை உணர ஒரு பாசுரம் போதும். கடவுளரில் கற்பதற்கு உகந்தவர் இராமபிரான் மட்டுமே; மற்றைய அவதார மனைத்தும் அடுத்தபடியே! விரும்பி ஓதிக் கற்பதற்கு இராமனின் சரிதைக்கு ஈடு வேறு இல்லை என்பது நம்மாழ்வாரின் ஈடுபாடு.

கற்பார் இராமபிரானை யல்லால் மற்றுங் கற்பரோ?
புற்பா முதலாப் புல்லெறும் பாதியொன் றின்றியே
நற்பாலுக்கு அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக்கு (உ)ய்ந்தனன் நான்முகனர் பெற்ற நாட்டுளே.

இத்திருவாய்மொழிப் பாசுரம் இராமபிரான் அயோத்தி வாழ் அத்துணை உயிர்களுக்கும் விண்ணுலகில் இடம் வாங்கித் தந்தமையைப் பேசுவது. தம் ஆட்சியில் உள்ள புல் பூண்டு முதலிய தாவரங்களுக்கும் எறும்பு முதலிய ஏனைய சீவராசிகட்கும் சொர்க்கம் கிட்டுமாறு, இராமபிரான் இறுதிக் காலத்திலேயே எல்லாவற்றையும் தம்மோடு மேல் உலகினுக்கு அழைத்துச் சென்றமையின், அவர்க்கு ஈடு வேறு எந்த அவதாரமும் இல்லை; எனவே படித்தால் இராமாயணம் படிக்க வேண்டும் என்று வெகு உறுதியாக நம்மாழ்வார் பேசுவார். புல்லுக்கும் எறும்புக்கும் மோட்சம் கிட்டச் செய்தமை, குகனுக்கு ஈசனின் நட்புக் கிடைத்ததைக் காட்டிலும் அதிசயப் பேரருட் செயல் ஆகுமே.

இந்த இராமாவதார இறுதி நிகழ்ச்சியைப் பெருமாள் திருமொழிப் பாசுரம் ஒன்று நினைவுகூரும். ஆழ்வார் இராமபிரானைத் தில்லைச் சித்திரகூடம் எனும் கோவிந்தராஜப் பெருமானின் திருமுன் காண்பார்.

அன்று சராசரங்களை வைகுந்தத் தேற்றி
அடல் அரவப் பகை ஏறி அசுரர் தம்மை
வென்றிலங்கு மணி நெடுந்தோள் நான்கும் தோன்ற
விண்முழுதும் எதிர் வரத் தன் தாமம் மேவி
சென்றினிது வீற் றிருந்த அம்மான் தன்னைத்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடம் தன்னுள்
என்றும் நின்ருன் அவன்இவன் என்றேத்தி நாளும்
இறைஞ்சு மினே எப்பொழுதும் தொண்டீர் நீரே.

இப்பாடலில் சராசரங்கள் அனைத்தையும் எம்பிரான் வைகுந்தம் இட்டுச் சென்ற பேச்சே, நாடக வியலுடன் கவினுறுங் காட்சியாகக் கண் முன் வந்து நிற்கிறது. அரக்கரை மாய்த்து வென்ற விம்மிதத்துடன் பூரித்து நிற்கும் நான்கு தோள்களும், "தோள் கண்டார் தோளே கண்டார்" எனு மாறு எழிலுடன் இலங்க, விண்ணகத்து வாசிகள் எதிர்கொண்டழைக்க, மன்னவன் மக்கள் புல்பூண்டு எல்லாவற்றுடன் வைகுந்தத்திற்குத் தம் கருட வாகனத்தின் மீது அமர்ந்தவண்ணம் புகுகிருர். இக்காட்சியினைப் பாட்டின் முதல் ஐந்தடிகளும் பாடும். அத்தகைய இராமன் பெருமையினைப் பாடி உய்யுமாறு ஆழ்வார் அடியர்க்கு அருள்வார். நாளும் இறைஞ்சுமினே எப்பொழுதும்.

இங்கெல்லாம் இராமனின் வீரமும் ஈரமும் சேர்த்தே பேசப்படுகின் றன. இராவணன் வீழ்ச்சியும், மறுபுறம் வீடணனின் ஏற்றமும் இராமனின் வீரத்தின் விளைவாகவும் கருணை காரணமாகவும் நிகழ்வன வாம். வீடணனுக்காகவே திருவரங்கத்தில் எம்பெருமான் தென்திசை நோக்கிப் பள்ளி கொண்டுள்ளார். இந்தக் கருத்தைப் பாடும் பாசுரங்கள் சில உண்டு. அவற்றுள் மிக்க பேர் போன பாடல் இது:

குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித் தென்திசையிலங்கை நோக்கி
கடல் நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலுமாகண்டு
உடலெனக் குருகுமாலோ என்செய்கேன் உலகத்தீரே!

இது தொண்டரடிப் பொடியாழ்வார் திருவாக்கு ஆகும்—திருமாலை என்பர். வீடணனுக்காகத் தம் முக மண்டலத்தைத் தெற்கு நோக்கி வைத்த எம்பெருமானின் திருவுள்ளம் ஆழ்வாரை உணர்ச்சி வசப்பட்டு உருகச் செய்கிறது. அரங்கநாத மூர்த்தம் இராமபிரானின் பரம்பரை யில் பூசைப் பெட்டகத்தில் இருந்து வந்தது என்பர். பள்ளி கொண்ட அத்திரு மூர்த்தியினை ஆழ்வார்கள் சாட்சாத் இராமனுகவே பாடி யுள்ளனர். திருமாலின் பள்ளி கொண்ட திருக்கோலத்தை இராம பிரானுகவே கண்டு வணங்கிக் களித்த ஆழ்வாருள் தொண்டரடிப் பொடிகள் தலைசிறந்தவர். 'செருவிலே அரக்கர் கோனைச் செற்ற நம் சேவகனுர்' எனப்பாடும் விப்ர நாராயணர்,

'சிலையினுல் இலங்கை செற்ற தேவனே தேவன் ஆவான்' என அறுதியிட்டுப் பேசுவார்.

இங்கெல்லாம் நாம் ஆழ்வார்கள் தம் திருவாக்கில் அவர் உள்ளத்தே இராமபிரானுக் கென உள்ள தனியிடத்தை உணர்கிறோம்.

# அருளோசை

பிற்சேர்க்கை ஏப்ரல் 1973.

பாடம் 10 வினாவிடை சந்தா எண்............

இந்த இதழிலுள்ள கட்டுரைகள் பற்றிய வினாக்களேயன்றி பொது சமய அறிவுத் தொடர்பான கேள்விகளும் உள்ளன. வினாத்தாள்களி லன்றி வேறு தாள்களில் விடைகள் எழுதக் கூடாது. சொந்தக் கையெழுத்தில் எழுதி 30-4-1973 க்குள் இவ்வலுவலகத்தில் கிடைக்கும் படி அனுப்பவேண்டும்.

மதிப்பெண் சமம்] [மதிப்பெண் 100

1. கடவுள் அருமை, பெருமை, எளிமை, நுண்மை இந்த நான்கு திறத்திலும் ஒப்பில்லாதவர்—விளக்குக.

2. சாதாரண அறிவுக்கும் விஞ்ஞான அறிவுக்கும் வேறுபாடுகள் எவை? சுருக்கி வரைக.

3. "மிக்க இறை நிலையும் மெய்யாம் உயிர் நிலையும்" எவை?

4. திருநாவுக்கரசர் துன்பத்தில் இன்பம் கண்டவர்—எடுத்துக் காட்டுகளுடன் நிறுவுக.

5. வேதகிரிப் பெருமானை வழிபட்டுப் பேறு பெற்றோர் யாவர்?

6. பழநிக்குள்ள வேறு பெயர்கள் எவை ? காரணங்களுடன் விளக்குக.

7. பொருளாட்சியின் அவசியத்தைப் பற்றிக் காரணங்கள் கூறி விளக்குக.

8. நம்மாழ்வாருக்கு இராமபிரான் மீதுள்ள ஈடுபாட்டினை அவர் திருவாக்கினின்றும் கூறுக.

9, உலகிலுள்ள சமயங்கள் எவை? அவற்றின் பெயர்க் காரணங்களை எடுத்துரைக்கவும்.

10. ஆலய வழிபாட்டின் அவசியத்தைப் பற்றிக் காரணங்கள் கூறி நிறுவுக.

கையெழுத்து

---

[பெரிய எழுத்தில் தெளிவாக எழுதுக]

பெயர் வயது

கதவு எண், தெரு

ஊர்—அஞ்சல் நிலையம்

மாவட்டம்

இப்பகுதியில் விடைகளை எழுதி உரிய அஞ்சல் தலைகளையொட்டிக் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்ப வேண்டும் :—

"அருளோசை"
தமிழ்நாடு தெய்விகப் பேரவை,
9, மகாராஜா சூரியராவ் சாலை,
ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-600018.

---

அனுமதிக்கப்படும்

வினவிடைப் பகுதியில் சந்தாதாரர்கள் தான் கலந்துகொள்ள வேண்டுமா? குடும்பத்திலுள்ள மற்றவர்களும் எழுதலாமா?

—வே. வேம்பன், விரிவுரையாளர்; பேரவைக் கல்லூரி, பூம்புகார்.

[சந்தாதாரர்கள் மட்டுமே எழுதியனுப்புவது நலம்—ஆசிரியர்].

விடைதருகிறேம்

"விடை தருகிறேம்" என்ற ஒரு பகுதி ஆரம்பித்து வாசகர்களின் வினக்களுக்கு விடை தரவேண்டு கின்றேன்.

—டாக்டர் சிங்கை மணிமாறன், இந்திய ராணுவம்.

திருத்திய விடைத்தாள்

திருத்திய விடைத் தாள்களை அவரவர்களுக்கே அனுப்பிவைத்தல் நலம்.

—எ. ஜேயராமன், சிவகுருநாதபுரம்.

இலட்சியங்கள்

பேரவை, நாட்டில் இந்து சமய இலட்சியங்களையும் சீர்திருத்தங் களையும் அறத்தோடும் முறையோடும் செயல்படுத்துகிறது—தங்கள் சேவை மேன்மேலும் வளர வேண்டுகிறேன்.

--பி. எம். வேலாயுதம், ஆசிரியர், புளியங்குடி.

தாயினும்........

என்போன்றூர்க்குப் பேரின்பப் பேரறிவூட்டும் அருளோசை, தாயி னும் சிறந்த தகைமையது.

--சி. வ. சுப்பையா பிள்ளை, மூவலூர்.

நல்வழி

என்போன்ற இளைஞர்களை "அருளோசை" போன்ற இதழ்கள் தான் நல்வழிப்படுத்தும் என்பதில் ஐயமில்லை.

—ஆ. சு. சொக்கலிங்கம், ஆக்கூர்.

தன்னிகரிலாத் திருப்பணி

தாய்மதத்தின் பெருமைகளைத் தரணிக்கு எடுத்தியம்பும் தங்களது தன்னிகரிலாத் திருப்பணி மேலும் சிறப்புற இறைவனை வேண்டு கிறேன்.

—பூவை ஏ. ஆதித்தன், பூவியூர்.

இளம் எழுத்தாளர்களை......

புதிய இளம் எழுத்தாளர்களை ஊக்குவிக்க அருளோசை முன்வர வேண்டும்.

—கவிஞர் இரா. கணபதி, கணேசபுரம்.

மதிப்பெண்களுடன்

திருத்திய வினத்தாள்களை மதிப்பெண்களுடன் அவ்ரவர்களுக்கே அனுப்பினல் சிறப்பாக இருக்கும்.

---மு. சரவணன், மண்டபம்.

தனியிடம்

சமய உலகில் தங்களது அருளோசை இதழ் ஒரு தனியிடம் பெற்று விட்டது.

—தி. கு. நவநீதம், க. இராமலிங்கம், திருச்சி-2.

வளர்க! வாழ்க!!

தெய்விகப் பேரவை "அருளோசை"யின் மூலம் செய்யும் தொண்டு வளர்க! வாழ்க!!

—எஸ். சீனிவாசன், நாகூர்.